# ஸ்பென்ஸர் 'டீ' தான்
## சந்தேகமில்லை!

ஸ்பென்ஸர் 'டீ'யின் சுவையும்,
மணமும் தனிப்பட்டவை.
தரத்தை விரும்புவோர்
அனைவரும் கேட்டு வாங்குவது
ஸ்பென்ஸர் தேயிலையைத்தான்.

ஸ்பென்ஸர் 'கிரீன்லேபல்'
'ரெட் பாண்ட்' மற்றும்
'பீகோ டஸ்ட்' ஆகியவை
நீலகிரியின் உயர் மிகு
சாரல்களில் பயிராகும்
தேயிலை ரகங்கள்.

உங்கள் தேவைக்கேற்ப
100, 250 மற்றும் 500
கிராம் கார்டன்களில்
கிடைக்கின்றன.

ஸ்பென்ஸர் அண்டு கோ.
லிமிடெட்
சென்னை மற்றும் கிளைகள்.







FDSST852

## தேர்ந்தெடுக்கப் பலரகங்கள் ரூ. 125 க்கு மேற்பட்டு ரேடியோக்களும் டிரான்ஸிஸ்டர்களும்





மாடல் டிபி 0816



மாடல் டிபி 0581



மாடல் டிபி 0579



மாடல் டிபி 0509



மாடல் டிஏ/டியு 0777



மாடல் டிஏ 0926



மாடல் டிஏ/டியு 02[illegible]



மாடல் டிஏ/டியு 0776



மாடல் டிஏ/டியு 0824



மாடல் டிஏ 0366

நட்பு மிக்க உங்கள் மர்பி வியாபாரியிடம் இன்றே அவற்றைக் காணுங்கள்.

**murphy** மர்பி

NAS 6142d

*Murphy sets the standard*



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 8



# ஏன் இந்தத் தயக்கம்?

கல்லூரி போதனை மொழிப் பிரச்னை மிகவும் முக்கியத்துவம் பெற்றுவிட்ட சூழலில் நடைபெற்ற உபஅத்தியட்சகர்களின் மகாநாட்டை நாடு பேராவலுடன் கவனித்து வந்தது. சர்வகலாசாலைத் தலைவர்கள் அனைவரும் ஒருங்கு கூடுகிறார்கள் என்றதுமே நம் கல்வி மந்திரி அவர்களுக்குக்கூட ஒரு 'குளிர்' உண்டாகி யிருக்கும் போலும்! 'ஆங்கிலத்தை அகற்றியே தீரவேண்டும் என்று நான் ஒருபோதுமே சொல்லவில்லை; பிரதேச மொழிகளைக் குறிப்பிட்ட கெடுவுக்குள் பீடத்தில் அமர்த்திவிட வேண்டும் எனவும் நான் நிர்ப்பந்தம் செய்யவில்லை; இவ்விஷயத்தில் சர்வகலாசாலைகளின் உரிமையைப் பறிக்கவும் இல்லை' என்றெல்லாம் தம் ஸ்வரத்தை ரொம்பவும் இறக்கிக் கொண்டு பேசியுள்ளார். ஆனால் மன மாற்றத்தின் மீதின்றி, சூழ்நிலையின் மாற்றத்தை யொட்டிப் பலப்பல பேசி இறுதியில் ஏமாற்றத்தை அளிக்கும் அரசியல்வாதிகளின் வார்த்தைகளுக்கு அதிகம் மதிப்புத் தருவதற்கில்லை. கல்வித் துறைத் தலைவர்களின் கண்டிப்பான முடிவுகளைத்தான் இளைஞர் சமுதாயம் காப்பாக நம்பியுள்ளது.

அவர்கள் என்ன செய்திருக்கிறார்கள்? பட்டப் படிப்புக்கு மேற்பட்ட கல்வியில் ஆங்கிலம்தான் போதனை மொழியாக இருக்க வேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். ஐந்து அல்லது பத்து ஆண்டுகளில் பிரதேச மொழிகளைப் பட்டப் படிப்புக்கான போதனை மொழியாக்கலாமெனினும், ஒவ்வொரு சர்வகலாசாலைக்கும் ஒவ்வொரு பாடத் திட்டத்துக்கு ஏற்றபடியே இதனை நீக்குப் போக்குடன் அமுல்செய்ய வேண்டும் எனச் சொல்லியுள்ளனர். இவ்விஷயத்தில் சர்வகலாசாலைகளுக்கே முடிவு செய்யும் உரிமை இருப்பதை நாசூக்காக எடுத்துக் காட்டியுள்ளனர்.

இதெல்லாம் நல்ல தீர்மானங்கள் தாம். ஆயினும் கூர்ந்து கவனித்தால் கல்வி மந்திரி சொன்னதைவிட அதிகமாகக் கல்வித் துறை நிபுணர்கள் எதையும் வற்புறுத்திவிடவில்லை என்று காண்கிறோம். ''சர்வகலாசாலைகளே, போர்க்கோலம் பூணுங்கள்!'' என ராஜாஜி முழங்கினார். ஆனால் உண்மையில் அவை தரும யுத்தத்துக்குத் தயாராக இல்லை போலவே காண்கிறது. ஏதோ சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தவிப்பதுபோல் அழுத்தமும் ஆவேசமும் அற்ற தீர்மானங்களைச் செய்துள்ளது மகாநாடு. 'ஹிந்தி' என்ற வார்த்தை பற்றிப் பிரஸ்தாவமே இம்மகாநாட்டில் இல்லாதது ஏனோ?

வெட்டு ஒன்று துண்டு இரண்டாக விஷயத்தை விண்டு கூறுவதற்கு எல்லாத் தகுதிகளும் பெற்ற உபஅத்யட்சகர்கள் ஏன் தயங்க வேண்டும்? 'பட்டப் படிப்புக்குத் தகுந்த தரமான நூல்களைப் பிரதேச மொழிகளில் தயாரிப்பது கடினம்; தினந்தோறும் வளர்ந்து வரும் கலை — விஞ்ஞானத்துடன் தொடர்பு கொள்ள ஆங்கிலமே துணை நிற்கும்; பிரதேச மொழிகளுக்கு அந்த ஆற்றல் இருப்பினும் கூட, போதனை மொழி மாற்றத்தால் இந்தியாவின் கல்வியாளர் சமூகம் திட்டுத் திட்டாகத் துண்டித்துப் போகும்' என்பதையெல்லாம் அழுத்தம் திருத்தமாக அறைந்து கூறி தில்லி சர்க்காரின் திட்டத்தைத் தடுத்து நிறுத்துவதில் மகாநாடு ஏன் பூரண சக்தியும் காட்டவில்லை?

நமது உபஅத்யட்சகர் டாக்டர் ஏ.எல். முதலியார் அவர்களைப் போல் நிலவரத்தை தீரமாக எடுத்தியம்பும் சில உப அத்தியட்சகர்கள் இருப்பினும், ஏனைய சர்வகலாசாலைத் தலைவர்கள் கூட மற்ற சாமானிய மக்களைப் போலப் பிரதேசப் பற்றினால்தான் உந்தப்படுகிறார்களா? அல்லது தங்களது 'சுதேச' விசுவாசத்தைப் பற்றிச் சந்தேகம் ஏற்பட்டுவிடப் போகிறதே என்பதால் தயங்குகிறார்களா? இல்லாவிடில், சர்க்காரைப் பகைத்துக் கொள்ள விரும்பாதிருக்கின்றனரா? சர்வகலாசாலைத் தலைவர்கள் நம் மதிப்புக்கு உரிய பெரியார்களெனினும், இக்கேள்விகளை வருத்தத்துடன் கேட்டாக வேண்டியிருக்கிறது.

# போர்க்கள வீரம் போதாது!

சிக்கிம் பகுதியில் நாதுலாவில் சீனப் படைகள் மீண்டும் விஷமம் செய்து வருகின்றன. இந்தியப் படைகள் தீரமுடன் எதிர் நடவடிக்கை எடுத்து வருகின்றன. சீனர்களை அங்கு சிதறடித்து அவர்களது பிரதேசத்துக்கு வாபஸ் பெறச் செய்யலாம் என்ற நம்பிக்கை நிலவுகிறது.

மகிழ்ச்சி தரும் நிலவரம்தான். ஆனால் இது முழுமையான மகிழ்ச்சியல்ல. சிக்கிமிலோ, பூடானிலோ, நேஃபாவிலோ அவ்வப்போது சீனம் செய்யும் ஊடுருவலைத் தடுத்து நிறுத்திவிட்டால் மட்டும் அபாயத்தைத் தீர்த்ததாக ஆகிவிடாது.

பாதுகாப்பு மந்திரி ஸ்ரீ ஸ்வர்ண ஸிங் சீனத்தின் 'புளுகு மூட்டையைப் பிய்த்தெரிந்து அம்பலப்படுத்திவிட்டது' பாராட்டுக்குரியதுதான். ஆனால் இதனால் காரியாம்சத்தில் என்ன பலன் ஏற்படப் போகிறது? சீனத்தைக் கண்டிப்பதோடு நில்லாமல், அதைச் செயலிழக்கச் செய்யும் காரியங்களை மேற்கொள்வதே பாதுகாப்பு மந்திரி செய்ய வேண்டிய முதற் கடமை.

நீண்ட நெடிய இமாலய எல்லையில் எங்கேனும் ஓரிடத்தில் சீனம் தலையை நுழைப்பதும் அகப்பட்டதைச் சுருட்ட முயல்வதும் சர்வ சகஜமாகிவிட்டன. இவ்வாறு அது நம்மைச் சீண்டி விடாதிருக்குமாறு அதைக் கட்டுப்படுத்த வேண்டுவதே நமது தேவை. இந்தத் தேவையைப் பூர்த்தி செய்ய ஒரே வழி நாம் பன்முறை கூறி வந்தது போல் அமெரிக்காவுடன் நமது சர்க்கார் ஓர் உறுதியான பாதுகாப்பு ஒப்பந்தம் செய்துகொள்வதே. அப்போதுதான் சீனம் ஊடுருவல் செய்யாமல் அடங்கி நிற்க வழியுண்டு. ஆனால் நமது அரசாங்கம் அந்த வழியில் செல்லும் வாய்ப்பு மேன்மேலும் குன்றி வருகிறது. அமெரிக்காவைப் பற்றி வீண் சந்தேகங்களைப் பரப்புபவர்களின் கை ஓங்கி வருகிறது. இது தேசத்துக்கே துரதிர்ஷ்டம்.

# பண்புக்கு அழகல்ல!

தமிழ் நாட்டைக் குளிர்பதனப் பெட்டியுடன் ஒப்பிட்டுப் பேசுவார் ஸ்ரீ காமகோடி ஆசாரியர்கள். எல்லாப் பிரதேசத்துப் பண்புகளையும் தன்னில் கொண்டு, அவை கெடாமல் காத்துத் தருவது தமிழ்நாடு என்பதால் இப்படிக் குறிப்பிடுவார். குளிர்பதனப் பெட்டி கொதிகலனாக மாறினால் அதைவிட வருந்தவேண்டியது எதுவும் இல்லை. அப்படி மாறாது என்ற நம்பிக்கை நமக்கு உண்டு. என்றாலும் சிறிது இருள் படரத் தொடங்கும் போதே நாம் விழிப்புற்று நம்மைச் சரி செய்துகொள்ள வேண்டும்.

ஹிந்தியின் பரதேச்சாதிகாரத்தை எதிர்க்கு முகமாகச் சென்னையில் ஹிந்தி சினிமாக்கள் காட்டக் கூடாது என ஆட்சேபிப்பது பொருத்தமற்ற செய்கை. கலைக்கு மொழி போதனை இலட்சியமல்ல; கருத்தை இதயத்தில் செலுத்துவதே அதன் இலட்சியம். (இன்றைய சினிமா உண்மைக் கலையாக உள்ளதா என்ற கேள்வியை இங்கு எழுப்ப

## காமகோடியின் கருணைமொழி



நாம் ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டிருக்கிறோம். மழை வந்தால் ஓடிவிடுகிறோம். இதுதான் நம் பக்தியின் நிலை. நன்றாக இருக்கிறவரைக்கும் பக்தன் என்று நம்மை நினைத்துக்கொண்டிருப்போம். நம் பக்தி சோதனைக் காலங்களில் தளர்ந்துவிடும்.

நமக்குக் கெட்ட எண்ணமே வரவில்லை என்று எண்ணிக் கொண்டிருப்போம். திடீரென்று சொப்பனம் கண்டால் அதில் கெட்ட காரியம் பண்ணுவதாகத் தோன்றும். சொப்பனம் என்பது வாழ்க்கையில் நிறைவேறாத அபிலாஷைகளின் உருவம். சொப்பனத்தில் கெட்ட காரியம் செய்வதாகக் கண்டால் நாம் உள் மனசில் இப்படி எண்ணிக் கொண்டிருக்கிறோமே என்று துக்கப்பட வேண்டும். கெட்ட காரியம் சொப்பனத்தில் வராமலிருந்தால் அப்பொழுது நல்லவர்களாக இருக்கிறோம் என்று சந்தோஷப்படலாம். நம்மை நாமே சோதித்துப் பார்த்துக்கொள்ளத்தான் ஈசுவரன் சொப்பனத்தை வைத்திருக்கிறார்.

காமாக்ஷியின் கடாட்சம் நமக்கு உண்டா என்பதைப் பார்க்க இதுவே வழி. சொப்பனத்தில் அவளைத் தியானம் செய்து கொண்டிருப்பது போல வருகிறதா என்று பார்க்க வேண்டும்.









ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்களின் பீடாரோஹண வைர விழாவையொட்டி மயிலையில் நடந்த ஊர்வலம். 2. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளைப் பற்றி டாக்டர் டி. எம். பி. மகாதேவன் எழுதிய 'காஞ்சி முனிவர்' என்ற ஆங்கில நூலை ஸ்ரீ ராமப் பிரசாத் முகர்ஜி வெளியிட்டார். 3. காதி கிராமோத்யோக் பவனில், நடைபெற்று வரும், 'காந்தி வேள்வி'யில் தொண்டர்கள் நூல் நூற்கிறார்கள். 4. திருக்குறள் பிரசார சபையினருக்காக ஸ்ரீ வேங்கடகிருஷ்ணன் ஹிந்தியில் மொழி பெயர்த்த திருக்குறளை மத்திய அமைச்சர் திரு ஷேர்சிங் சென்னையில் அண்மையிலே வெளியிட்டார். 5. டாக்டர் ராதாகிருஷ்ணன் தபால் தலையை ஸ்ரீராம் கபாக் சிங்கிடமிருந்து தமிழக கவர்னர் பெற்றுக் கொள்கிறார். (கீழே:) பீஜித் தீவில் தென்னிந்திய சங்கத்தின் ஆண்டு விழா சமீபத்தில் நடைபெற்றது.





# செய்திப் படங்கள்

வேண்டியதில்லை. சினிமா உண்மைக் கலையாக இல்லாவிடில் ஹிந்திப் படங்களை மட்டுமின்றி, தமிழ்ப் படங்களையும்தான் எதிர்க்க வேண்டும். ஆனால் இப்போது மொழிக்காகவேதான் எதிர்ப்புத் தோன்றியுள்ளது.)

கலை – மொழி தொடர்பு ஒருபுறம் இருக்கட்டும். சென்னையில் எத்தனையோ வட நாட்டவர்கள் இருக்கிறார்கள். பாரதப் பிரஜைகளான அவர்களது பொழுது போக்கைத் தடுக்க நமக்கு ஏது உரிமை? மாதுங்காவில் தமிழ்ப் படம் காட்டக்கூடாது என்றால் நாம் எப்படிப் பொங்கி எழுவோம்? நம்மை எதிராளியின் நிலையில் வைத்துப் பாராமல் காரியங்கள் செய்தால் மனிதப் பண்பையே மறந்தவராவோம். நாம் எடுக்கிற அநுசிதமான நடவடிக்கைகளால் சிவசேனை போன்றவற்றின் போக்கு மேலும் தீவிரமாகும். முடிவில் நமது மொழிக்காரர்களுக்கே அதிகத் தீங்கை உண்டாக்கியவராவோம்.

ஹிந்திப் பட எதிர்ப்பைத் தாம் ஆதரிக்கவில்லை என்று சந்தேகத்துக்கு இடமின்றிக் கூறியுள்ள தமிழக முதல்வர் அவர்களுக்கு நம் வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறோம். அவரது விசால உணர்வு மக்களனைவரையும் பற்றிக் கொள்ளுமாக!

# கேரளத்தில் சலசலப்பு

**கா**ங்கிரஸை முறியடித்ததற்காகக் கேரளத்தைப் பாராட்ட வேண்டுமாயினும், கம்யூனிஸ சக்திகளைப் பதவியில் அமர்த்தியதன் மூலம் ஓர் அவிவேகத்தை அந்த மாநிலம் செய்து விட்டது. கம்யூனிஸமே ஐக்கியத்தை பிளவுபடுத்தும் சக்தி என்பது ஒருபுறமிருக்க, இந்தியாவிலோ கம்யூனிஸ்ட் கட்சியே இரண்டாகப் பிளந்து நிற்கிறது. இருசாராருமாகக் கூடி, மற்ற சில எதிர்க் கட்சிகளுடன் சேர்ந்து கேரளத்தில் சர்க்கார் அமைத்த போதே பலருக்கு அதன் ஆயுளைப் பற்றி நம்பிக்கையில்லை. மத்திய சர்க்காரிடமிருந்து தானியம் பெறுவதைப் பெரும் பிரச்னையாக்கி, மந்திரி சபையின் கட்டுக் கோப்புக் குலைவை யாரும் கவனிக்காதபடி செய்து வந்தார் கேரள முதல்வர். ஆனால் இது எவ்வளவு காலத்துக்கு முடியும்? இப்போது அவரது மந்திரி சபை சகாக்களே ஐக்கியமின்மையைப் பகிரங்கப்படுத்தி வருகிறார்கள்.

கேரள சர்க்கார் கவிழ்ந்து விடுமா, கவிழ்ந்தால் பிறகு என்ன நேரும் என்பது பற்றி ஹேஷ்யங்கள் உலவுகின்றன. வலது சாரிக் கட்சி எதுவும் கேரளத்தில் நன்கு நிலைப்படுகிற வரையில் எந்தச் சர்க்காரும் கவிழ்வதாலோ, பதவிக்கு வருவதாலோ அம்மாநிலத்தின் பிரச்னைகள் தீராது என்பது திண்ணம். காங்கிரஸ் ஆட்சியில் அலுத்துக் கம்யூனிஸ்ட்களுக்கு வாய்ப்புத் தந்த கேரள மக்கள், இப்போது கம்யூனிஸ்ட் ஆட்சியிலும் அலுப்புக் கொண்டு வலதுசாரியின் வளர்ச்சிக்கு ஆதரவு தர அவசியம் ஏற்பட்டு விட்டது.

# விவசாயிகளுக்கு வாழ்த்துக்கள்!

**வி**ளைச்சலைப் பெருக்குவதற்காக விவசாயிகள் செய்து வரும் முயற்சிகள் பற்றித் தினமும் பத்திரிகைகளில் செய்திகள் பார்க்கிறோம். கரம்பு நிலத்தைச் சாகுபடிக்குக் கொண்டு வந்துள்ளனர் பலர். விளை நிலத்தில் முன்னிலும் பன்மடங்கு விளைவித்துள்ளனர் பலர். உணவு உற்பத்திக்குக் குந்தகமான கொள்கைகளை அரசாங்கம் கடைப்பிடித்தும் கூட, வானமாதேவி கருணை சுரந்து மழை பொழிந்திருப்பதால் விவசாயிகள் உற்சாகத்துடன் உணவுப் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

சர்க்காரை எதிர்பாராமல் தமிழகத்தில் மட்டுமின்றி இந்தியாவின் மற்றப் பகுதிகளிலும் விவசாயிகள் அதிக உற்பத்திக்கான நடவடிக்கைகளை எடுத்திருப்பதாக அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம். இது மாபெரும் முக்கியத்வம் வாய்ந்த ஓர் அபிவிருத்தி. இச் சமயத்தில் அவர்களின் ஊக்கம் குன்றும்படி அரசாங்கம் ஏதும் செய்யாதிருக்குமென நம்புவோம். அதிகம் உற்பத்தி செய்வதனால் உற்பத்தியாளர்களும் அதிக நன்மை பெறுமாறு செய்ய வேண்டும். 'சர்க்கார் ஏதோ ஒரு விலையை நிர்ணயித்து நிர்ப்பந்த முறையில் கொள்முதல் செய்யாது. விவசாயிகளுடைய சாதனையின் பலனைச் சர்க்கார் திருடாது' என்று விவசாயிகளுக்கு நம்பிக்கை தர வேண்டும். விவசாயிகளின் அச்சத்தைப் போக்கி நம்பிக்கையூட்டுவதே இன்று சர்க்காரின் கடமை. இதனால் கோடானுகோடி மக்களின் வயிறு குளிர நிச்சயம் வழி பிறக்கும்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள ராஜ மகேந்திரபுரத்தில் இவ்வருஷத்திய வியாஸ பாரத ஆகம ஸதஸை நடத்தினார்கள். ஆகம விற்பன்னர்களும், சிற்ப நிபுணர்களும் பங்கு கொண்ட இந்த ஸதஸில் பாரத நாட்டின் பல பகுதிகளையும் சேர்ந்த கிராமக் கலைஞர்கள் இடம்பெற்றனர். ஸ்ரீ பெரியவாளும், ஸ்ரீ புதுப் பெரியவாளும் உரைகள் நிகழ்த்துவதையும், பாரத நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்த கிராமக் கலைஞர்களையும் எதிரே காண்கிறோம்.

# விருதுக்குப் பெருமை தரும் விற்பன்னர்

'பிரதிவாதி பயங்கரம்' என்பது அவரது அடைமொழி. ஆனால் அவரோடு வாதிக்க முற்படாதவர்களுக்கு அவர் என்றும் பயங்கரமாக இருந்ததில்லை. இன்றோ, நாம் அறிந்த வரையில் அவர் சகலருக்குமே பேரன்பராகத் திகழ்ந்து வருகிறார். சம்ஸ்கிருத பருவதமாகவும், தமிழ்க் கடலாகவும் விளங்கும் காஞ்சீபுரம் உபய வேதாந்த ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளைத்தான் குறிப்பிடுகிறோம் என்று நேயர்கள் அனைவரும் நிச்சயமாகப் புரிந்து கொள்வார்கள்.

பிரவசனங்கள் மூலமும் பிரகரங்கள் மூலமும் பொதுவாக ஹிந்து சமயத்துக்கும், குறிப்பாக வைணவத்துக்கும் ஸ்ரீ அண்ணங்கராசாரியர் பல்லாண்டுகளாக புரிந்து வரும் ஒப்பற்ற தொண்டுகளை உலகறியும். ஆழ்வார்களின் மொழியமுதத்தில் ஆழ்ந்து திளைத்த இவர், வேதசமுத்திரத்தில் முக்குளித்து முத்துக்களைத் திரட்டியவர். இவர் வெளியிட்டுள்ள பிரகரங்களின் பட்டியலே ஒரு பெரிய புத்தக அளவிருக்கும் எனில் இவரது எழுத்தாற்றலை அநுமானிக்கலாம். பழுத்த பழமாக விளங்கும் இன்றும் இவர் அலுக்காமல் சளைக்காமல் உயிர்த் துடிப்புடன் சமய சேவை செய்து அதன்வழி சமூக சேவை செய்துவருகிறார். அவரது சிரித்த முகமும், விரிந்த இதயமும், கனிந்த பண்பும் அவரது படிப்பறிவை ஞானம் என்கிற மகத்தான தனமாக்கியுள்ளன.

பிரதிவாதி பயங்கரம் அவர்களுக்குத் தேசிய வித்துவான் என்ற விருதினை பாரத அரசாங்கம் வழங்கியுள்ளது. இது அந்த விருதுக்கே ஒரு கௌரவம் என்பதில் சற்றும் ஐயமில்லை.



பிரதிவாதி பயங்கரம்
ஸ்ரீ அண்ணங்கராசாரியர்



திருக்கழுக்குன்றம்
ஸ்ரீ ராமசந்திர திட்சிதர்



இவ்வாண்டு தேசிய வித்துவான் விருதை பெற்றுள்ள மற்றொரு தமிழ் நாட்டுப் பெரியார், திருக்கழுக்குன்றம் ஸ்ரீமான் ராமசந்திர தீக்ஷிதரவர்கள். அறிவுலகில் நன்கு பரிசயமான மகா பண்டிதர் அவர். மயிலை சம்ஸ்கிருதக் கல்லூரியில் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் அத்யாபகராகவும், தலைவராகவும் பணி புரிந்தவர் அவர். காசி ஹிந்து சர்வகலாசாலையிலும் பெரும் பதவிகளை வகித்துப் புகழ் கொண்டவர். பாரதத்தின் பல சர்வகலாசாலைகளில் ஒரு வெள்ளி விழாக் காலத்துக்கும் அதிகமாகப் பரீக்ஷாதிகாரியாக இருந்து சம்ஸ்கிருதக் கல்விக்குப் பணி புரிந்திருக்கிறார்.

மகாமஹோபாத்தியாய குப்புஸ்வாமி சாஸ்திரிகளுடன் சேர்ந்து வால்மீகி ராமாயணம் முதலிய உத்தம கிரந்தங்களைப் பரிசோதித்து வெளியிட்டவர் ஸ்ரீ தீக்ஷிதர். மீமாம்ஸ வேதாந்த சாஸ்திரத்தில் பல அரிய நூல்களை வெளியிட்டிருக்கிறார் இவர்.

ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்களிடம் 'சாஸ்திர ரத்னாகர' விருது பெற்றவர் வெகு அபூர்வமான வித்வான்களே ஆவர். இதே போல் கொச்சி மகாராஜாவிடமிருந்து 'பண்டிதராஜ' பட்டம் பெறுபவர்களும் வெகு அருமையாகவே இருப்பார்கள். இவ்விரு விருதுகளும் பெற்றவர் ஸ்ரீ ராமசந்திர தீக்ஷிதர் என்பதொன்றே இவரது தேர்ந்த கல்விக்கு அத்தாட்சியாகும். படிப்போடு அடக்கமும் அமைதியும் நிறைந்தவர் அவர். இப்போது பாரத அரசாங்கமும் அவரது புலமையைக் கௌரவித்திருப்பது வித்வத் உலகுக்கே மகிழ்ச்சியளிக்கும்.



## டாடா ஸ்டீல்
## வெளி நாடு செல்கிறது

ஜம்ஷெட்பூரில் தயாராகும் ஆங்கிள்கள், சானல்கள், பார்கள், ஜாய்ஸ்ட்டுகள், மற்ற ஸ்டீல் பொருள்கள் இவற்றை, ஓர் ஆண்டில் பல முறை, மற்றப் பொருள்களுடன் கிழக்கு ஆப்பிரிக்கா, மத்தியக் கிழக்கு, தூரக்கிழக்கு, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளுக்கு கல்கத்தா துறைமுகத்திலிருந்து செல்லும் கப்பல்கள் ஏற்றிச் செல்கின்றன. இறக்குமதியில் ஈடுபட்டுள்ள நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு, மிக முக்கியமானவை எஃகுப் பொருள்கள்.

டாடா குரூப் ஏற்றுமதி ஸ்தாபனமான, சர்க்கார் அங்கீகாரம் பெற்ற கமர்ஷியல் & இண்டஸ்ட்ரியல் எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட் (CIEL) டாடா ஸ்டீல் ஏற்றுமதியில் ஈடுபட்டுள்ளனர். சென்ற ஆண்டில் ரூ.95 லக்ஷம் மதிப்பில் 26,500 டன் எடையுள்ள எஃகுப் பொருள்களின் ஏற்றுமதி 1966-67ல் ரூ. 2.25 கோடி மதிப்பில் 43,000 டன் எடைக்கு அதிகரித்துள்ளது. திட்டமிட்ட தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான அன்னிய செலாவணியை பெறுவதில் டாடா ஸ்டீல் ஸ்தாபனத்தின் பங்கை, இந்த அதிகரித்த ஏற்றுமதி அளவு எடுத்துக் காட்டும்.

**டாடா ஸ்டீல்**

தி டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி லிமிடெட். th-4018

# திறமான புலமை

ஆங்கிலம் வேண்டுமா வேண் டாமா என்ற வாதப் பிரதி வாதங்கள் நடந்துவரும் இன்று, ஆங்கிலத்தால் உலக அரங்கில் இந்தியாவுக்குக் கிட்டும் பெருமைக்கு ஓர் உருவமாகத் திகழ்கிறார் ஸ்ரீ ஆர். கே. நாராயணன் அவர்கள். தெள்ளிய தூய ஆங்கில நடையில் தமிழக கிராம வாழ்வை உலகுக்குப் படம் பிடித்துக் காட்டுவதில் அவரது பேனாவின் ஆற்றல் அதிசயமானது. 1935ல், தமது இருபத்தியொன்பதாவது வயதில் 'சுவாமியும் சிநேகிதர்களும்' (Swami and Friends) என்ற நாவலின் மூலம் மேல் நாடுகளுக்கு நமது மால்குடி வாழ்வைச் சித்திரிக்கத் தொடங்கியதிலிருந்து, மேன்மேலும் நுட்பமான நகைச் சுவையும் மற்ற உணர்வுகளும் பொங்கும் பல படைப்புக்களை அளித்து, 'வழிகாட்டி' (The Guide) என்ற நவீனத்தால் ஆங்கில இலக்கிய உலகில் நிரந்தரமான ஸ்தானம் ஏற்படுத்திக் கொண்டவர் ஸ்ரீ நாராயணன். அவரது சிறு கதைகளுக்குத் தனியானதொரு மணம் உண்டு. பாத்திரங்கள் இயல்பாக உருவாகி நம்முடன் அந்தரங்கம் பேசுவார்கள். நிகழ்ச்சிகள் இயற்கையாக உருவெடுத்து நம்மையும் அவற்றில் பங்கு கொள்ளச் செய்யும். சூழலும் தானாக மலர்ந்து அதில் நம்மை இருத்திக் கொள்ளும்.

பாரதி விரும்பியபடி வெளி நாட்டாரும் மதித்து வணக்கம் செய்யும்படியான திறமான புலமை ஸ்ரீ ஆர். கே. நாராயணன் அவர்களுடையது. மேல் நாட்டில் அவர் பெற்றுள்ள பட்டங்களுக்கும் விருதுகளுக்கும் சிகரமாக சமீபத்தில் இங்கிலாந்தின் லீட்ஸ் சர்வ கலாசாலை அவருக்கு! டாக்டர் பட்டம் வழங்கியுள்ளது.

பட்டமளிப்பின்போது ஸ்ரீ நாராயணன் அவர்களை அறிமுகம் செய்த பத்திரமே ஓர் இலக்கியமாக உள்ளது. நேயர்களும் அதனைச் சுவைத்து மகிழ அதன் பகுதிகளை இங்கு அளிக்கிறோம்:

''உயிரோடுள்ள எழுத்தாளர்களில் மிகவும் உயிர்த் துடிப்புள்ள ஒருவர் ராசிபுரம் கிருஷ்ணசுவாமி நாராயணன். கனிசமான ஓர் இலக்கியத் தொகுதியைத் தந்துள்ள ஆசிரியர் அவர். அவரது நூல்கள் அழுத்தமான, ஆனால் சிக்கனமான முறையில், அவற்றின் கேந்திர ஸ்தானமான மால்குடி என்ற ஊரின் விசேஷ மணத்தை எடுத்துக் காட்டும். மதுர மாங்கனியையும், புனித்த திராட்சை ரசத்தையும் கலந்தாற்போல் அவை கிழக்கத்திய மேற்கத்தியப் பண்புகளின் கலவையை அளிக்கும். அவரது நாவல்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தின் உணர்வைப் பூரணமாகவும் நெருக்கமாகவும் அளித்தாலும், குறுகிய எல்லையில் நம்மைக் கட்டுப்படுத்துவதில்லை.

''குடும்பத் தொடர்புகளைச் சூட்சமமாகவும் அந்தரங்கமாகவும் விவரிப்பவை அவரது நாவல்கள். பாசத்தோடு கேலி செய்யும் கண்களால் மனித அநுபவத் திட்டுக்களை வர்ணிப்பார் கதாசிரியர். அவரது எழுத்தில் ஹாஸ்யம் என்பதே ஒருவிதத்தில் தார்மிக திருஷ்டியாகி விடும். இந்தியாவின் தனி வண்ணம் தருகிற கவர்ச்சி, அதிகாரபூர்வமான அழுத்தம் இவற்றினூடே பிரபஞ்சம் முழுதும் தழுவும் மானுட இயல்பினையும் விளக்கமாகக் காண்போம். சுத்தமான, நிர்மலமான ஆங்கிலத்தில் ஸ்ரீ நாராயணனது கதைப் பொருள் விளக்கப்படுகிறது. இந்திய உணர்வுகளை அவரது ஆங்கில நடை அழகுற வர்ணிக்குமாறு அம்மொழியைக் கையாண்டுள்ளார். ஸ்ரீ நாராயணன் ஆங்கில மொழியினால் ஆற்றக் கூடிய சாதனைகளையே விஸ்தரித்துவிட்டார்; ஆங்கில இலக்கியத்தின் எல்லையை விஸ்தரித்து விட்டார். கிழக்கத்திய ஞானத்தை மேற்கத்திய செய் முறையுடன் இணைத்து விட்டார்; கிழக்கத்திய மேதையை மேற்கத்தியக் கலையில் கலந்துவிட்டார்.''

ஆங்கில மொழியின் எல்லையைப் பெருக்கி விட்டதாக அம்மொழியினரே ஸ்ரீ நாராயணன் அவர்களைப் பாராட்டும்போது நாம் அடையும் உவகைக்கு அளவேது?



# ராஜாஜியின் கருத்துக்கள்

நான் இதைத் தயக்கத்துடனே எழுதுகிறேன்: பிரதமர் என்ற பெயரின் பெருமையில் மட்டும் ஸ்ரீமதி இந்திரா காந்தி திருப்தி அடைந்து, ஸ்ரீ மொரார்ஜி தேசாயே இந்திய சர்க்காரின் சகல இலாக்காக்களையும் நிர்வகிக்க அனுமதித்து விட்டாரா?' அணுக் கொள்கை, அந்நிய விவகாரம் இவற்றைக்கூட மொரார்ஜி அல்லவா விளக்கத் தொடங்கி விட்டார்?' துணைப் பிரதமர் என்ற அந்தஸ்தினால் அவர் இத்தகைய உரிமை பெற முடியுமா என்பது எனக்கு ஐயமாகவே உள்ளது. அணு ஆயுதப் பரவலின் தடுப்புக்காக அமெரிக்காவும் ருஷியாவும் செய்கிற உடன்படிக்கையை டி காலே எதிர்த்து வருகிறார். மொரார்ஜி வெளியிட்டுள்ள கருத்து டி காலேக்கு நூறு சதவிகிதமும் ஊக்கம் தருவதாக உள்ளது. அமெரிக்காவுக்கும் ருஷியாவுக்கும் அணுத் தடுப்பில் 'ஏகபோக்கியம்' தரக் கூடாது என்ற எண்ணத்தில் இப்படிச் செய்யப்பட்டு வருகிறது. மொரார்ஜியின் கருத்துத்தான் இந்திய சர்க்காரின் அதிகாரபூர்வமான கருத்து எனில், நேருஜியின் அழுத்தமான அபிப்பிராயத்தை இந்தியா கைவிட்டுவிட்டது என்றேயாகும். அணுஆயுதத் தீமையைத் தடுப்பதில் எது நடைமுறைக்குச் சாத்தியம் என்பதை உள்ளபடி உணர்ந்தே நேருஜியின் கருத்து உருவாயிற்று. அணு ஆயுதத்தைப் பூரணமாக எதிர்க்கும் போதே, சரித்திரம் செய்துள்ள தவிர்க்க முடியாத நிலவரத்தை உணர மறுப்பது தேச நலனுக்கு உகந்ததல்ல; சர்வதேச அரசியலறிவுக்கும் உகந்ததல்ல.

* * *

சிவசேனையின் அடிப்படை நோக்கு மராட்டியருக்கே மகாராஷ்டிரம் என்பதுதான். மொழிவாரி மாகாண அமைப்பின் மகவே இது. மகவுக்குப் பெற்றோர்களின் குணம் வாய்ப்பது இயற்கை. அதைக் குறை கூறிப் பயனில்லை. ஒவ்வொரு ராஜ்யத்திலுமுள்ள மக்களின் லட்சியம், அந்தந்த ராஜ்யத்தையே ஒரு தனித்தேசமாக்கி, பாரத தேச ஐக்கியத்தை எதிர்ப்பதுதான். இதெல்லாம் நடக்கும் என்று எதிர்பார்த்து முன்பே ஜவாஹர்லால் அவர்களிடம் சொன்னேன். இந்தத் தீய எதிர்விளைவு ஏற்படக்கூடும் என அவர் ஒப்புக் கொண்டார். மொழிவாரி மாகாணப் பிரிவினை நல்லதல்ல என்று ஒப்புக் கொண்டார். ''ஆனாலும் இதற்கு நாம் என்ன செய்வது?'' என்று ஆயாசத்துடன் கூறிவிட்டுத் தீமைக்கே கொஞ்சம் கொஞ்சமாக அடிபணிந்து விட்டார். மற்ற ராஜ்யக்காரர்கள் பிரவேசிக்கக் கூடாது என்று ஒவ்வொரு ராஜ்யமுமே துவேஷம் பாராட்டப் போகிறது; முன்பே வந்து குடியேறியவர்களை மறைமுகமாகப் பலவந்தம் செய்யப் போகிறது; புதிதாக வரப் போகிறவர்களிடம் நேரடியாகத் துவேஷத்தைக் காட்டப் போகிறது. சிவசேனையுடன் சமரஸம் செய்து கொள்ளும் முயற்சி பற்றிப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. ஆனால் உண்மையில் இதனால் விசேஷ நன்மை எதுவும் விளையும் என எதிர்பார்ப்பதற்கில்லை. தேச ஐக்கியத்துக்கு முரணான எந்த அம்சத்திலும் சமரஸம் செய்து கொண்டுவிடக் கூடாது என்பதே முக்கியம். சட்டப்படி நடவடிக்கை எடுக்கும் போது எம்முறைகளைக் கையாள்வது என்பதில் மட்டுமே சமரஸம் செய்து கொள்ள முடியும்.

* * *

ஸ்ரீ சாக்ளா ராஜிநாமா செய்ததால் இந்திய சர்க்காருக்குச் செம்மையான அடி விழுந்ததா இல்லையா என்பது இன்று பிரச்னை அல்ல. ஆங்கிலத்துக்குப் பதில் பிரதேச மொழிகளைச் சர்வகலாசாலைகளில் அமர்த்துவது இந்தியாவினுடைய எதிர்காலத்தின் மீது செம்மையாக அடிப்பதாகும் என்பதே பிரச்னை.

* * *

'கல்விக் கொள்கை' என்பது சர்க்காரைப் பொறுத்த விஷயம் என்றே நினைத்துப் பேசுவதை என்னென்பது? இது மாணவர் விஷயமல்லவா? எந்தப் பாடங்களை எந்த மொழியில் படிப்பது என்று தேர்வு செய்யும் சுதந்திரம் மாணவர்களுக்கல்லவா இருக்க வேண்டும்? அவர்கள் சுதந்திரமாகத் தேர்வு செய்வதற்குரிய வாய்ப்புக்களைத் தருவதே சர்க்காரின் பொறுப்பு. எல்லாவற்றிலும் மக்களுக்குப் பதில் சர்க்காரே முடிவெடுத்துவிடுவதைச் சிலர் ஆதரிக்கின்றனர். எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் இது தவறான போக்கு; ஆபத்தானதும்கூட.

* * *

போதனை மொழி பற்றி விவாதிக்கச் சென்னையில் நவம்பர் 4, 5 தேதிகளில் ஒரு பெரும் கல்வி நிபுணர் மகாநாடு நடக்க இருப்பது பற்றி மகிழ்கிறேன். மகாநாடு இவ்வளவு காலம் தள்ளி நடக்கவிருப்பதால் உடனடியாக ஐக்கியத்துக்கு விளையும் ஆபத்தை உணரவில்லையோ என்ற எண்ணம் ஏற்படுகிறது. எனினும் ஏதோ செய்யவிருக்கின்றனர் என்பதில் திருப்தி காண்போம். ஸ்ரீ ஏ. ராமசுவாமி முதலியார் அவர்கள் வரவேற்புக் குழுத் தலைவராக இருப்பாரென அறிகிறேன். குழுவுக்கு அவரது செயலூக்கம் ஒரு பெரும் சொத்தாக இருக்கும்.

* * *

தமிழக முதன் மந்திரியின் உறுதிக்கு என் பாராட்டைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மாகாண சர்க்கார்களுக்காக மத்திய சர்க்கார் வைத்துள்ள பிரதேச மொழி என்ற கண்ணியில் அவர் சிக்கவில்லை. திரு அண்ணாதுரையின் 59வது பிறந்த நாள் விழா நிகழ்ந்துள்ளது. அவரது நேர்மையும், தீரமும், அறிவும், பரந்த மனப்பான்மையும் ஆண்டு தோறும் மக்களால் அதிகமாக உணரப்பட வேண்டுமென வாழ்த்துகிறேன்.

# யாரோ இவர் யாரோ?

'சோ'



## அத்தியாயம் 8

கிரிஜாவின் சிரிப்பில் முத்து கிறங்கிப் போனான். தான் இந்த மண்ணுலகத்திலேதான் இருக்கிறோமா என்ற சந்தேகம் உண்டாகி விட்டது அவனுக்கு.

நகை என்பது ஓர் ஆபரணம்.. ஓர் அலங்காரம். "புன்னகை" என்பது 'பொன்' நகை. அதாவது தங்க ஆபரணம். இப்போதெல்லாம் பெண்கள் தங்க நகை அணியாமல் பாஷனுக்காக இமிடேஷன் நகை அணிவதுபோல் புன்னகை புரியாமல் வெறும் நகையே புரிவதைப் பார்க்கிறோம்.

கிரிஜா முத்துவிடம், "டாக்டர்! உங்களைத்தான் அப்பா எதிர்பார்த்துக் கிட்டிருக்கார். ஆனால் இவ்வளவு சீக்கிரம் வருவீங்கன்னு நாங்க நினைக்கலே ஸார்!"

"எல்லாம் ரவி பண்ணிய வேலை!" என்று உளறிவிட்டான் முத்து.

"ரவியா? அது யார் ரவி?" என்று கேட்டாள் சித்ரா. முத்து தன் தவற்றை உணர்ந்தான். "ரவி தெரியாது, ரவி? அதாவது சூரியன்! சூரியன் பண்ணின வேலைதான் நான் சீக்கிரமாக வந்து விட்டேன்."

"சூரியன் பண்ணின வேலையா?"

"ஆமாம்! எனக்கு வெய்யில் — சூரிய வெய்யில் பிடிக்காது. அதனாலேதான்! சீக்கிரமா வெய்யில் வரதுக்கு முன்னாலே நான் வந்து விட்டேன், எனக்கப்புறம்தான் வெய்யில் வரும்!" என்று சொல்லி முத்து ஓர் அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

"கிக்கிக் கிக்!" கிரிஜாவின் சிரிப்புத் தொடர்ந்தது. "இருங்க டாக்டர்! அப்பாவைக் கூப்பிடறேன்" என்று முத்துவிடம் கூறிவிட்டு, கிரிஜா மாடியை நோக்கி, "அப்பா! அப்பா! டாக்டர் வந்துட்டாரு!" என்று கூவினாள். மாடிப் படிகளில் உடனே ராஜரத்தினம் ஓடி வந்தார்.

"வாங்க, டாக்டர் சார்! வாங்க. நீங்கதான் டாக்டர் மேகநாதனா!".

ஒவ்வொருவரும் இதே கேள்வியைத் தானா கேட்க வேண்டும் என்று நினைத்து மனம் நொந்தான் முத்து. பழிக்குப் பழி வாங்குவது என்று தீர்மானித்து, "நீங்கதான் ராஜரத்தினமா?" என்று கேட்டான்.

"நான்தான் ராஜரத்தினம்!"

"நான்தான் டாக்டர் மேகநாதன்!"

"ரொம்ப சந்தோஷம் டாக்டர் சார்! நீங்கதான் எப்படியாவது என் அசோக்கைக் குணப்படுத்தணும்."

"கவலைப்படாதீங்க டாக்டர் அதெல்லாம் கண்டிப்பாக் குணப்படுத்திடுவாரு" என்று இடைமறித்தான் சிங்காரம்.

"டாக்டர் ஸார்! வந்த வேலை முடிகிறவரை நீங்க நம்ம வீட்டிலேயே தங்கலாம்" என்றார் ராஜரத்தினம்.

"ரொம்ப நன்றி சார்!" என்றான் முத்து.

"சரி, வாங்க சார்! போய் அசோக்கைப் பார்க்கலாம்" என்று ராஜரத்

தினம் மாடிப் படிகளில் ஏறினார். கிரிஜாவும் முத்துவும் அவரைப் பின் தொடர்ந்தனர்.

"ஆண்டவனே! இவர் மகன் அசோக்கின் ஆயுளைக் கெட்டியாக்கு" என்று இறைவனை வேண்டிக்கொண்டே சென்றான் முத்து.

அவர்கள் மூவரும் மேலே போக வாசலிலிருந்து ஒரு குரல் கேட்டது.

"ஸார்! ஸார்!"

அவ்வாறு கூப்பிட்டது எதிராஜ்தான். டாக்டர் மேகநாதனாக வந்து ராஜரத்தினத்தை ஏமாற்றி வீட்டிலேயே தங்கி, நெக்லெஸை அடித்து விடவேண்டும் என்று திட்டத்தை மீண்டும் மனத்தில் உறுதிப்படுத்திக் கொண்டு வாசலில் நின்றான் அவன்.

மாடியிலே முத்து டாக்டர் மேகநாதனாகப் போய்க் கொண்டிருக்க, வாசலிலே எதிராஜ் டாக்டர் மேகநாதனாக வந்து நின்றான்!

தன்னிடம் சித்ரா கோபித்துக் கொண்டு போவதைப் பற்றி ரவி சற்றும் கவலைப் படவில்லை. எப்படியும் அவள் மனத்தை மாற்றித் தன்னிடம் இழுத்துவிடலாம் என்ற அசையாத நம்பிக்கை அவனுக்கு இருந்தது. சின்னத்துரைக்குத் தன்மீது அபிமானம் அதிகமாகிவிட்டது என்பதை நினைத்து ரவி சந்தோ



ஷப்பட்டான். அடுத்த குதிரைப் பந்தய தினத்துக்குள் எப்படியாவது சித்ராவிடம் பேசிச் சமாதானம் செய்து விடுவது என்று தீர்மானமும் செய்து கொண்டான். இப்படி நினைத்ததுதான் தாமதம். இன்றே அதைச் செய்துவிடுவது என்று குதிரைப் பந்தய வாசலில் டாக்ஸியைப் பிடித்துச் சின்னதுரை வீட்டுக்குப் புறப்பட்டான். நினைத்தவுடன் காரியத்தில் இறங்குவது அவன் கூடப் பிறந்த குணநிசயமாக இருந்தது.



சித்ராவும் சின்னதுரையும் குதிரைப் பந்தய மைதானத்திலிருந்து புறப்பட்டு ஏற்கனவே வீட்டை அடைந்து விட்டிருந்தார்கள். ரவி அவர்கள் வீட்டு வாசலை நெருங்கியபோது யாரோ வீட்டை விட்டு வெளியே போவதைக் கவனித்தான். ''இந்த ஆசாமி இங்கு வர என்ன காரணம்? சின்னதுரைக்கும் இந்த ஆசாமிக்கும் என்ன சம்பந்தம்?'' என்று அவன் மனம் பல கேள்விகளைக் கேட்டது. தன் மனம் கேட்ட கேள்விகளுக்குச் சின்னதுரையிடமே கேட்டு விடை அறிந்து கொள்ளலாமா என்று ஒரு கணம் சிந்தித்தான் ரவி. ரவியின் சிந்தனை எப்போதுமே ஒரு கண நேரத்துக்கு மேல் நீடித்ததில்லை. சின்னதுரையிடம் இதைப் பற்றிக் கேட்க முடியாது என்று தீர்மானித்து அந்த ஆசாமியையே கேட்டுவிடுவது என்ற முடிவுடன் டாக்ஸியிலேயே அவனைப் பின்தொடர்ந்தான். ''சித்ராவைப் பார்த்துப் பேச வந்து அதை முழுவதும் மறந்து விட்டு இப்படி ஏதோ ஓர் ஆசாமியைப் பின்தொடர்ந்து செல்கிறோமே!'' என்று ரவி நினைத்துப் பார்க்கவே இல்லை. 'அந்த ஆசாமி இங்கு வரக் காரணம் என்ன?' என்ற கேள்வியே அவன் முன்னால் நின்றது.

ரவியைப் பின்தொடர்ந்து நாமும் சென்றால் அந்த ஆசாமி யார் என்று நமக்கும் தெரிந்துவிடும். ஆனால் இப்போது ரவியைப் பின்தொடரக் கூடிய நிலையில் நாம் இல்லை. ராஜரத்தினம் வீட்டில் முத்து, டாக்டர் மேகநாதனை மாடிப் படி ஏறிக் கொண்டிருக்க, வாசலில் எதிராஜ் டாக்டர் மேகநாதனை வந்து நின்றுகொண்டிருக்கிறான் என்பது நமக்குத் தெரியும். ஒரு வீட்டில் ஒரு டாக்டர் புகுந்தாலே அங்கு ஏதாவது நடக்கும் என்று எதிர்பார்க்கலாம். அப்படியிருக்க இரண்டு டாக்டர்கள் புகுந்திருக்க ராஜரத்தினம் வீட்டில் என்னென்ன நடக்கப் போகிறதோ! ஆகையால் இச்சமயத்தில் ரவி எக்கேடு கெட்டுப் போகட்டும் என்று விட்டு விட்டு ராஜரத்தினம் வீட்டின் மேல் பார்வையைச் செலுத்துவோமாக..

வாசலில் ''ஸார், ஸார்!'' என்ற குரல் கேட்டுச் சிங்காரம் வாசலுக்குச் சென்றான்.

மாடியில் ஓர் அறையை நோக்கி முத்துவை ராஜரத்தினம் அழைத்துப் போய்க் கொண்டிருந்தார்.

''ஏன் டாக்டர்! உங்களுக்கு நல்ல பிராக்டீஸ் இருக்குமே?'' ஏதாவது பேசவேண்டுமே என்பதற்காகக் கேட்கப்பட்ட கேள்வி இது.

''ஆமாம்! ஆமாம்! நல்ல பிராக்டிஸ்!'' என்று முத்து ஆமோதித்தான்.

''ஏதாவது அஸிஸ்டெண்ட் வெச்சுக்குங்களேன். இப்பத்தான் நிறைய ஜூனியர் வைத்தியர்களெல்லாம் இருக்காங்களே.''

''அதெல்லாம் எதுக்கு ஸார்!'' ஒரு பெரிய டாக்டரின் தன்னடக்கத்தோடு கூறினான் முத்து.

கிரிஜா குறுக்கிட்டு, ''டாக்டர்! இதோ இந்த அறையிலேதான் அசோக் இருக்கான் வாங்க.'' என்று ஓர் அறையைக் காட்டினாள்.

மூவரும் அந்த அறைக்குள் நுழைந்தனர். உள்ளே நுழைந்தவுடன் கிரிஜா பரிவோடு, ''அசோக்! அசோக்!'' என்று அழைத்தாள். ஒரு முனகல் சத்தம் கேட்டது. ஒரு அல்சேஷியன் நாய் பிரசன்னமாயிற்று.

''அசோக் எங்கே?'' என்றான் முத்து.

''இவன்தான் அசோக்'' என்றார் ராஜரத்தினம்.

''இந்த நாயா அசோக்?'' என்று முத்து திகைத்தான்.

''என்ன ஸார், அசோக்கைப் பார்த்து நாய்னு சொல்றீங்க?'' கிரிஜாவுக்கு உண்மையிலேயே கோபம் வந்துவிட்டது.

''ஸார்! நாய்க்கு வைத்தியம் பார்க்கவா டாக்டர் மேகநாதனை வரவழைச்சீங்க?''

''மிருக வைத்தியரைப் பின்னே எதுக்காக ஸார் கூப்பிடுவாங்க?''

''உங்களில் யாருக்கோ வைத்தியம் பார்க்கத்தான் கூப்பிட்டீங்கன்னு நினைச்சேன்!''

''விளையாடாதீங்க டாக்டர்! அசோக்கைக் கவனியுங்க. கொஞ்ச நாட்களா குரைக்கக் கூட மாட்டேங்குது.'' நாய் 'வள்வள்' என்று முத்துவைப் பார்த்துக் குரைத்தது.

''இப்பக் குரைச்சுடுச்சு. உங்க ஆசை தீர்ந்ததா?'' என்றான் முத்து.

''என்னமோ தெரியலே டாக்டர்! பத்து நாட்கள் கழிச்சு இப்பத்தான் உங்களைப் பார்த்தவுடனே குரைக்குது'' என்று வியந்தாள் கிரிஜா.

இந்தச் சந்தர்ப்பத்தில் வீட்டு வாசலுக்குச் சென்ற சிங்காரம் எதிராஜ் வந்திருப்பதைப் பார்த்து ஆச்சரியமடைந்தான். எதிராஜ் தன் கையாள் யாரையும் அனுப்பவில்லை என்பதையும், டாக்டர் மேகநாதனை எதிராஜ் அடித்து லாரியில் அனுப்பிவிட்ட விஷயத்தையும் அறிந்து கொண்டான். வேறு யாரோ ஒருவன்தான் டாக்டர் மேகநாதனை வேஷமிட்டு வந்திருக்கிறான் என்பதைச் சிங்காரமும், எதிராஜும்

# ரூ. 10,000 ரொக்கப் பரிசுகள்

உன்னதமான உங்கள் புகைப்படத்திற்குப் பெரியதோர் பரிசைப் பெறுங்கள்!



இரண்டு முதல் பரிசுகள் ரூ. 2,500 ஒவ்வொன்றும்.
இரண்டு இரண்டாம் பரிசுகள் ரூ. 1,000 ஒவ்வொன்றும்.
இரண்டு மூன்றாம் பரிசுகள் ரூ. 500 ஒவ்வொன்றும்.
இரண்டு நான்காம் பரிசுகள் ரூ. 100 ஒவ்வொன்றும்.
36 ஆறுதல் பரிசுகள் ரூ. 50 ஒவ்வொன்றும்.



## க்ளிக் III



க்ளிக் III காமிரா விசிறிகள் தங்கள் குடும்பத்தினர், வீட்டுப் பிராணிகள், தோட்டங்கள், உல்லாச விடுதிகள் மற்றும் மனதிற்கினிய காட்சிகள் யாவையும் ஒளி சிந்தும் புகைப்படங்கள் ஆக்கி மகிழ்கிறார்கள். நீங்களும் அந்த உல்லாசக் குழுவைச் சேர்ந்தவர்தானே? இல்லையெனில், விலை அதிகமற்ற ஒரு ஆக்பா க்ளிக் III வாங்கி, இம் மாபெரும் புகைப்படப் போட்டியில் கலந்து கொள்ளுங்கள். எளியதோர் படத்தைகொண்டு பெரியதோர் பரிசைப் பெறுங்கள். உங்கள் அருகமைந்த ஆக்பா-கேவார்ட் வியாபாரியிடமிருந்து ஒரு பிரவேச தாளைப் பெறுங்கள், அல்லது எங்களுக்கு எழுதுங்கள்: காம்படிஷன் டிபார்ட்மெண்ட், ஆக்பா-கேவார்ட் இந்தியா லிட்., கஸ்தூரி பில்டிங், ஜே. டாடா ரோடு, பம்பாய் 1.

ஆக்பா க்ளிக் III உலகப் பிரசித்தி பெற்ற ஒரு நம்பத் தகுந்த காமிரா. கணத்தில் 'கிளுக்' கலாம்—இலக்குப் பார்த்து இயக்கினால் போதும். சிக்கனத்திற்குச் சிக்கனமாக ஒவ்வொரு பிலிமிலும் 12 பெரிய (6 x 6 cm) படங்களை எடுக்கிறது. நீடித்த மனத் திருப்திக்கு வாங்குங்கள் ஒரு க்ளிக். விலை ரூ. 46/50 மட்டுமே. (ஸ்தல வரிகள் தனி.)



இன்றே 'க்ளிக்' செய்யத் தொடங்கி, உங்கள் பிரவேசத் தாள்களை டிசம்பர் 31, 1967-க்கு முன்பாக எங்களுக்கு அனுப்புங்கள்.

ஆக்பா-கேவார்ட் இந்தியா லிட்., பம்பாய் புது டெல்லி கல்கத்தா சென்னை

CMAG-97-203 TM

உணர்ந்தனர். அவனிடம் நெக்லஸைப் பற்றி உளறிவிட்டோமே என்று பயந்தான் சிங்காரம்.

''நீ போய் அவனை அழைத்து வா. நான் கவனிச்சுக்கிறேன்'' என்றான் எதிராஜ்.

''அவன் கிட்டே போய் என்னு சொல்றது?'' என்று சிங்காரம் கேட்க, ''அவனுடைய அஸிஸ்டெண்ட் வந்திருக்கேன்னு சொல்லு. அவனும் போலி டாக்டர்தானே. அவனாலே ஒண்ணும் செய்ய முடியாது. நீ போய் அழைத்து வா. பயப்படாதே'' என்று சிங்காரத்தை அனுப்பி வைத்தான் எதிராஜ்.

சிங்காரம் மேலே வரும்போது ராஜரத்தினம் முத்துவிடம், ''டாக்டர்! திடீர் திடீர்னு அசோக் அப்படியே சோர்ந்து படுத்துக்கறான். கொஞ்சம் நல்லாப் பாருங்க'' என்று கூறிக் கொண்டிருந்தார். சிங்காரம் அறைக்குள் வந்து முத்துவை ஒரு முறை முறைத்தான். ''டாக்டர்! உங்க அஸிஸ்டண்டாம் ஒருத்தரு. கீழே வந்திருக்கிறாரு!'' என்றான்.

ராஜரத்தினம், ''என்ன, டாக்டருக்கு அஸிஸ்டெண்டா? ஏன் டாக்டர் உங்களுக்குத்தான் அஸிஸ்டெண்டே இல்லேன்னு சொன்னீங்களே?'' என்றார் ஒன்றும் புரியாமல்.

முத்து தடுமாறினான்: ''நான் அஸிஸ்டெண்ட்தானே இல்லேன்னு சொன்னேன்.''

''இப்ப அஸிஸ்டண்ட்தானே வந்திருக்கிறார்?''

''வரட்டுமே! அதனாலே என்ன இப்போ?''

''உங்களுக்குத்தான் அஸிஸ்டண்டே இல்லையே?''

''எப்படி இல்லாமல் போகும்? அதுதான் இப்ப வந்திருக்கிறானே?''

''நீங்கதானே இல்லேன்னு சொன்னீங்க?''

''சும்மா சொன்னேன் ஸார். உங்களை ஏமாத்திட்டேன்!''

''ஆனாலும் உங்களுக்கு ரொம்ப விளையாட்டுத்தனம்.''

''கொஞ்சம் இருங்க. நான் போய் என் அஸிஸ்டெண்டைப் பார்த்துப்பிட்டு வரேன்'' என்று கூறிவிட்டுச் சிங்காரத்தோடு கீழே வந்தான் முத்து. வரும்போதே தன் மனத்துக்குள் ஒரு முடிவுக்கு வந்தான்.

'இந்த டாக்டருக்கு இப்படி ஒரு அஸிஸ்டெண்ட் இருப்பது தெரியாமல் போய்விட்டதே. இப்போது அவன் நம்மைப் பார்த்தால் ஒரு நிமிஷத்தில் நமது வேஷம் அம்பலமாகிவிடும்.



போட்டோகிராபர்: நான் 'தே பெஸ்ட்' கம்பெனி விளம்பரத்துக்கு வந்திருக்கேன், ஸ்டார் நிர்மலா தேவியைச் சிரிக்கச் சொல்லி அதைப் போட்டோ எடுக்கணும். அவங்களை வரச் சொல்றியா?

பையன்: வரச் சொல்றேன், பல்லோடவா இல்லே பல்லே எடுத்து விட்டா?

---

பேசாமல் அவன் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டு இந்த இடத்தை விட்டு ஓடிவிட வேண்டியது தான்' என்று தீர்மானம் செய்து கொண்டான்.

வாசலில் எதிராஜைப் பார்த்தவுடன் சாஷ்டாங்கமாக அவன் காலில் விழுந்தான். எழுந்து நின்று அவன் கையைப் பிடித்துக் கொண்டு, ''டாக்டர்! என்னை மன்னிச்சுருங்க. தெரியாத்தனமா உங்க ஸீனியர் டாக்டர் பேரைச் சொல்லிக்கிட்டு நான் வந்து விட்டேன். இனிமேல் இந்த மாதிரியெல்லாம் நான் செய்ய மாட்டேன். என்னை ஒண்ணும் செய்யாதீங்க. நான் ஓடிப் போயிடறேன்'' என்று கூறும் போதே முத்துவின் கண்களில் நீர் ததும்பியது.

எதிராஜ் தன் எதிரே நிற்பவன் சரியான பயந்தாங்குளி என்று புரிந்து கொண்டான். இவனிடம் எதைப் பற்றியும் மறைக்க வேண்டியதில்லை என்று தீர்மானித்து, ''டேய்! நான் உன்னை ஒண்ணும் செய்யலே. நீ யாரு? எதுக்காக இங்கே வந்தே?'' என்றான்.

''என் பேரு முத்து. காதலிக்கிறதுக்காக வந்தேன்.''

''யாரை?''

''உன்னை.''

''என்னது?''

''இல்லே! இல்லே! வந்து கிரிஜாவைக் காதலிக்க!''

''யார் கிரிஜா?''

''ராஜரத்தினம் பொண்ணு. இந்த வீட்டிலே டாக்டராக வந்து நைஸா அவளைக் காதலிக்கலாம்னு ரவி சொன்னான். அதனாலேதான் வந்தேன்.''

''யார் ரவி?''

''மகா அயோக்யன். என்னை அடிக்கடி இதுமாதிரி மாட்டிவிட்டுடுவான்'' என்று ஆரம்பித்து முத்து தான் ராஜரத்தினம் வீட்டுக்கு டாக்டராக வந்து சேர்ந்த கதையைக் கூறி முடித்தான்.

''இதோ பாரு, முத்து! நீ இங்கே டாக்டரா வந்தது என்னமோ வந்துட்டே. நான் இங்கிருந்து நெக்லெஸைத் திருட வந்திருக்கிறேன். அதை நீ தெரிஞ்சுக்கிறதிலே எனக்கு ஒண்ணும் ஆபத்து இல்லே'' என்று தான் வந்திருக்கும் காரண காரியங்களையும் விளக்கினான் எதிராஜ்.

''அய்யய்யோ! அப்ப நீ திருடனா?'' என்றான் முத்து.

''ஆமாம்! ஆனால் அதை நீ வெளியிலே சொன்னே, உன்னைத் தீர்த்துக் கட்டிப்பிடுவேன். நீ போலி டாக்டருன்னும் நிரூபிச்சுடுவேன். போலீஸிலே மாட்டிக்குவே, ஜாக்கிரதை!''

''நீயும்தான் திருடன். நீயும்தான் போலீஸிலே மாட்டிக்குவே!''

''எனக்கு அது சர்வ சாதாரணம். ஆனால் நீ போலீசிலே மாட்டிக்கிட்டா உன் குடும்ப மானமே போயிடும். உன் வாழ்க்கையே பாழாகி விடும். உன் காதலியும் உனக்குக் கிடைக்க மாட்டாள்!''

''இப்ப நான் என்ன செய்யணும் சொல்லு!''

''இந்த வீட்டிலே இருக்கிற விலை உயர்ந்த நெக்லெஸை நான் திருடப் போறேன். அதுக்கு இங்கேயே நான் உன் அஸிஸ்டெண்டாத் தங்கணும்!''

''நான் திருடனுக்கு உடந்தையாக இருக்க மாட்டேன்!''

''உன் இஷ்டம். என்னோட ஒத்துப் போவாட்டிப் போலீஸுக்குப் போ!'' என்று எதிராஜ் மிரட்டினான். அவன் போட்ட அதட்டல்களில் முத்து பயந்து நடுங்கினான். 'சரி! இப்போது எப்படியாவது சமாளித்து விட்டால், பிறகு ரவியிடம் போய் விஷயத்தைச் சொன்னால் அவன் ஏதாவது வழி செய்து நம்மைத் தப்பித்து விட்டு விடுவான். ராஜரத்தினம் வீட்டு நெக்லஸ் பிழைக்கும்' என்று தீர்மானித்து முத்து எதிராஜின் யோசனைக்குச் சம்மதம் தெரிவிக்க, எதிராஜும், சிங்காரமும் பின்தொடர முத்து மீண்டும் வீட்டினுள் நுழைந்து மாடிக்குச் சென்றான்.

இவர்களைக் கண்டதும் அசோக் வெறி பிடித்தாற்போல் குரைக்க ஆரம்பித்தது.

''என்ன இது! திருடனைப் பார்த்த மாதிரி குரைக்குது'' என்றார் ராஜரத்தினம்.

''என் அஸிஸ்டெண்டைப் பார்த்துக் குரைக்குது'' என்றான் முத்து.

''இவர்தான் உங்க அஸிஸ்டண்டா? பேரு என்ன?''

''எதிராஜ்!'' என்றான் எதிராஜ்.

''ஸார்! என் அஸிஸ்டெண்ட் எதிராஜும் என் கூடவே இங்கே இருக்கணும். அப்பத்தான் நான் அசோக்கைக் கவனிக்க முடியும்'' என்றான் முத்து.

''என்ன வேணும்னாலும் செய்யுங்க. என் அசோக் சீக்கிரம் குணமாகணும். அவ்வளவுதான் எனக்கு வேண்டியது.'' என்று ராஜரத்தினம் கூற முத்து அசோக்கை நெருங்கினான். அதன் உடலில் ஒரு முறை கைவைத்தான்.

'ளொள்' என்று குரைத்து அவன் மீது பாய்ந்தது அசோக். முத்து அலறிப் புடைத்துக் கொண்டு ஒரே தாவாகத் தாவினான். அசோக் விடுவதாக இல்லை. அது அவன் மீது மீண்டும் பாய்ந்தது. முத்து தடதடவென்று மாடிப் படிகளில் இறங்கி ஓட, அசோக் அவனைத் துரத்த ஒரே ரகளையாகி விட்டது.

ராஜரத்தினம், ''அசோக்! அசோக்!'' என்று கூவிக் கொண்டே அதைத் தொடர்ந்து ஓடினார்.

முத்து ஹாலைச் சுற்றிச் சுற்றி ஓட, நாய் அவனைத் துரத்திக் கொண்டிருந்தது. ''ஸார்! இந்த நாய்க்கா உடம்பு சரியாயில்லை? உடம்பு சரியாயிருந்தால் இன்னும் என்ன பாடுபடுத்துமோ!'' என்று அழமாட்டாக் குறையாகக் கூறிக் கொண்டே முத்து ஓடிக்கொண்டிருந்தான். நாய் சற்று நின்று ஓய்வெடுத்தது.

''பார்த்தீங்களா, டாக்டர்! நின்னிடிச்சு! அதுக்கு மட்டும் உடம்பு நல்லா இருந்தால் உங்களை இப்பச் சும்மா உட்டிருக்குமா?'' என்று கூறி வருத்தப்பட்டாள் கிரிஜா.

''சரி, சரி... அதுக்கு என்ன உடம்புன்னு பாருங்க!'' என்று ராஜரத்தினம் அவசரப்பட்டார். முத்து மீண்டும் அசோக்கிடம் போக முற்பட்டதும் அது உறுமிற்று. முத்து பின்வாங்கினான்.

''என்ன டாக்டர் இது? இப்படிப் பயப்படறீங்களே!'' என்று ராஜரத்தினம் கேட்க, எங்கே தன் குட்டு வெளிப்பட்டு விடுமோ என்று பயந்தான் முத்து.

''நாயைப் பார்த்து இப்படி ஓடற டாக்டரை இப்பத்தான் நான் பார்க்கிறேன்'' என்றாள் கிரிஜா.

''டாக்டரைப் பார்த்து இப்படிப் பாயற நாயை நான் இப்பத்தான் பார்க்கிறேன்'' என்ருன் முத்து.

''உங்க அஸிஸ்டெண்டைப் பாருங்க பயப்படாமல் நிற்கிருரு'' என்று எதிராஜைப் பாராட்டினுர் ராஜரத்தினம்.

''அவனுக்கு நாய் துரத்தி நல்ல அனுபவம். அதனுலே பயப்படாமல் நிற்கிருன்!''

''சரி, இப்ப இதுக்கு என்ன மருந்து கொடுக்கப் போறீங்க?'' என்று எதிராஜ் கேட்டான். முத்து டாக்டர் இல்லே என்று தெரிந்தால் அவனேடு சேர்ந்து தானும் வீட்டை விட்டு வெளியேற வேண்டியதுதான் என்று அவன் நன்ருக உணர்ந்திருந்தான்.

''மருந்தா?'' என்று யோசித்த முத்துவுக்குத் தூக்க மாத்திரை நினைவுக்கு வந்தது. உடனே சிங்காரத்திடம், ''போய், ஒரு டம்ளரிலே தண்ணீர் கொண்டுவா!'' என்று உத்தரவிட்டான்.

''எதுக்கு? அசோக்குக்கா?'' என்று சிங்காரம் கேட்டான்.

''இல்லே. எனக்குத்தான் ஓடின ஓட்டத்திலே மூச்சு வாங்குது.''

''ஏன் அப்படி ஓடினீங்க?'' என்ருள் கிரிஜா.

''சும்மா அசோக்கை 'டெஸ்ட்' பண்ணினேன். ஓடுதா, இல்லே சோர்ந்து போய்க் கிடக்குதான்னு பரீட்சை பண்ணினேன். நல்லா ஓடுது!''

அசோக் மீண்டும் உறுமிற்று. இரண்டாவது சுற்றுக்குத் தான் தயார் என்று தனக்கு அது எச்சரிக்கை விடுவதாக முத்து நினைத்தான். சரி! தூக்க மாத்திரையைப் பயன்படுத்த வேண்டியதுதான் என்று நினைத்துச் சிங்காரத்திடம் ''அசோக்குக்கு ஒரு டம்ளரிலே தண்ணி கொண்டா. மருந்து கொடுக்கப் போகிறேன்!'' என்று கூற, கிரிஜா, ''அய்ய்யோ! அசோக்குக்குத் தண்ணி ஒத்துக்காது. ஓவல்டின் கொண்டு வரேன். அதிலே மருந்தைக் கொடுத்திடுங்க'' என்று கூறி உள்ளே சென்ருள்.

முத்து கைப் பையைத் திறந்து தூக்க மாத்திரையை எடுத்தான்.

''இது வைடமின்! நாயும் சாப்பிடலாம், நாமும் சாப்பிடலாம். நல்ல 'ரெஸ்ட்' எடுத்துக்கிட்ட மாதிரி இருக்கும்!''

''அப்படியா?''

இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போது கிரிஜா ஓவல்டினேடு வர, முத்து அதைக் கையில் வாங்கி அதில் ஒரு தூக்க மாத்திரையைப் போட்டுக் கலக்கி ஒரு சிறிய தட்டில் கொட்டி அசோக்கின் முன் வைத்தான். அசோக் முறைத்தது.

''ச்சூ! ச்சூச்சூ! சாப்பிடும்மா!... அசோக்!... சாப்பிடும்மா!'' என்று கெஞ்சினுர் ராஜரத்தினம்.

''அது எப்படிச் சாப்பிடும்? எதையும் நாம முதலில் சாப்பிட்டால்தானே அசோக்கும் சாப்பிடுவான்'' என்று கிரிஜா கூறினுள்.

உடனே ராஜரத்தினம் முத்துவிடம், ''இது வைட்டமின்தானே. நாம்கூடச் சாப்பிடலாம்னு சொன்னீங்களே, சாப்பிடலாமா?'' என்ருர்.

''தாராளமாக!'' என்ருன் முத்து.

ராஜரத்தினம், அந்தத் தட்டை, தூக்க மாத்திரை கரைக்கப்பட்ட ஓவல்டினை ஒரு முறை பருகிப் பிறகு அசோக்கின் முன்வைத்தார். ''ச்சூச்சூச்சு! குடிம்மா அசோக் குடிம்மா'' அசோக் உண்ணுவிரதத்தைக் கைவிடவில்லே. கிரிஜா அசோக்கின் கழுத்துக் கடியில் தடவிக் கொடுத்து, ''இதோ பாரு, நான் குடிக்கிறேன். பார்!'' என்று தானும் ஒரு முறை அதைக் குடித்தாள். இப்படி மாறி மாறி ராஜரத்தினமும் கிரிஜாவும் அந்த ஓவல்டினைக் குடிக்க, அசோக் நின்று கொண்டே இருந்தது.

ராஜரத்தினத்துக்குக் கண்கள் கொஞ்சம் கொஞ்சமாக இருட்ட ஆரம்பித்தன. ''சூ!.... சூ....!'' என்று அசோக்கிடம் கெஞ்சிக் கொண்டே கண்ணை மூடிக் குறட்டை விட ஆரம்பித்தார். கிரிஜாவோ அதற்குள் சோபாவில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். தூக்க மாத்திரை நன்ருக வேலே செய்கிறது என்ற ஒரு வகையில் மட்டும் முத்து திருப்தி அடைந்தான். எதிராஜ் அவனை நெருங்கி ராஜரத்தினமும் கிரிஜாவும் தூங்கிவிட்டார்களென்ற தைரியத்தில் ''டேய்! நல்ல காரியம் சேஞ்சே. இப்ப நீ என்ன செய்யணும் தெரியுமா?'' என்ருன்.

'இவன் என்ன செய்யச் சொல்லப் போகிருனே' என்ற பயத்தில் முத்து நாய் எதிரில் இருந்த தட்டைப் பார்த்தான். இன்னும் சிறிது ஓவல்டின் மீதம் இருந்தது. ''கொஞ்சம் இரு!'' என்று எதிராஜிடம் கூறிவிட்டு அதை எடுத்து அப்படியே குடித்தான்.. ''நீ ஏண்டா அதைக் குடிச்சே?'' என்று எதிராஜ் அதட்ட முத்து விழித்தான். அப்படியே அவனும் தூங்க ஆரம்பித்தான். அசோக் முறைத்தபடியே நின்றது.

**(தொடரும்)**

**உங்கள் குழந்தையை நீங்கள் கட்டிக்கொஞ்சும் போது...**

குழந்தையின் பட்டான சருமத்திற்கீடான மென்மை உலகிலேயே வேறில்லையென்று நீங்கள் நினைக்கிறீர்கள் அல்லவா?

உண்மைதான்! அதனால்தான் உங்கள் குழந்தையின் சருமத்திற்கு பிராடலாலின் இதமான பராமரிப்பு தேவை. பிராடலால் மிக மென்மையான ஒரு கிருமி நாசினி. பினுகா பேபி பவுடரில் மட்டுமே உள்ள பிராடலால் உங்கள் குழந்தையின் மிருதுவான சருமத்தை எரிச்சல் அடையாமல் பாதுகாக்கிறது.

ஆம்! பினுகா பேபி பவுடர்கூட உங்கள் குழந்தையை நேசிக்கிறது. பினுகா பேபி பவுடர் உபயோகியுங்கள் — அவன் மகிழ்வதைக் காணுங்கள்.

# "அம்மா! பினுகா"




பினுகா பேபி பவுடர் அழகிய சீல்வைக்கப்பட்ட வெள்ளை டின்களில் எங்கும் கிடைக்கிறது.

# நாய் வளர்க்கும் நாயகர்

கே. எஸ். ராமானுஜம்

**அல்சேஷியன் நாய்களின் ஆயுள் காலம் என்ன? அவற்றின் குடும்ப வாழ்க்கை எப்படிப்பட்டது? அவற்றுக்கு மல்டி-விடமின் அவசியமா? அவற்றுக்கு எப்படி வியர்க்கிறது? அவை எப்படி விற்பனையாகின்றன?**

உதகமண்டலத்தில் அந்த வீட்டு வாசலில் நானும் என் நண்பர்களும் வந்து நின்றபோது அங்கு எங்களை வரவேற்க மனிதர் யாரும் இல்லை. ஒன்பது அழகிய அல்சேஷியன் நாய்களே துப்பாக்கியிலிருந்து ரவை பாய்வது போல் உள்ளேயிருந்து வெளிப்பட்டு, நன்கு வேலியிடப்பட்ட முன் முற்றத்தில் வந்து நின்று குரைத்தன.

நாய்களின் குரைப்பைத் தொடர்ந்து இன்னொரு கதவு திறந்தது. லெப்டினண்ட் கர்னல் டி. கே. ஒல்ட்ரினி அதன் வழியே வெளி வந்து எங்களை வரவேற்றார்.

கிழக்கத்திய உலகிலேயே முதன்மையிடம் பெற்ற அல்சேஷியன் வளர்ப்பாளர் இவர் தாம். இவரால் வளர்க்கப்பட்ட நாய்களுக்கு நூறு சவால் போட்டிச் சான்றிதழ்கள் கிடைத்துள்ளன. சாம்பியன் பட்டம் பெற்ற பதினைந்து நாய்களை வளர்த்துள்ள நாயகர் இவரே. (ஒரு சாம்பியன் நாய் இருப்பதே பெருமை என்று நாய் வளர்ப்புப் பண்ணைகள் கருதுமாம்!)

நாங்கள் அவருடன் பேச அமர்ந்தவுடன் நாய்களையும் அனுமதிக்கலாமா என்று வினவினார் ஸ்ரீ ஒல்ட்ரினி. என் பயத்தைப் பகிரங்கப்படுத்த நான் விரும்பவில்லை. தீரத்தை வரவழைத்துக் கொண்டு, ''அப்படியே செய்யுங்கள்'' என்றேன்.

என்ன ஆச்சரியம்! தங்களது எஜமானரின் குறிப்பறிந்த அந்த நாய்கள், சற்றுமுன் ஆக்ரோசமாகக் குரைத்தவை இவைதாமா என்று வியக்கும் வண்ணம், எங்களை வெகு நட்புணர்ச்சியுடன் சுற்றிச் சுற்றி வந்து மோந்து பார்த்தன.

கர்னல் ஒல்ட்ரினியை நான் கேள்விகள் கேட்டு அவரது பூர்வோத்தரம், அவரது நாய்ப் பண்ணையின் பூர்வோத்தரம் யாவும் தெரிந்து கொண்டேன்.

1914-ல் ஸிம்லாவில் ஓர் ஆங்கிலத் தம்பதிக்குப் பிறந்தவர் ஒல்ட்ரினி. அவர் பிள்ளைப் பிராயத்திலிருந்தே அல்சேஷியன் வளர்ப்பாளராக வேண்டுமெனக் கனவு கண்டிருக்கிறார். நாய்களிடம் நேயம், இயற்கையில் ஈடுபாடு இவையே வாழ்வின் ஈர்ப்புத் தானங்களாகக் கொண்ட இவருக்குத் திருமணத்திலும் நாட்டமில்லை. 'இந்த நாய்க் குடும்பத்தை ஏற்க எவள் இசைவாள்?' என்று கேட்கிறார்.

இரண்டாம் உலக யுத்தத்தில் ராணுவ வீரராகப் பணியாற்றியவர் இவர். பர்மா செல்லுகையில் தம்முடைய செல்ல நாய் ருடோல்ஃபை விட்டுச் சென்றார். மூன்றாண்டுகளுக்குப் பின் இவர் திரும்பிய போது, தூரத்திலேயே இவரை அடையாளம் கண்டு கொண்டது அந்த ஜீவன். தான் அவர் வருகைக்காகவே காத்துக் கொண்டிருந்ததைத் தெரிவிக்குமுகமாக அன்பைப் பொழிந்து தள்ளி விட்டது. அன்றிலிருந்து இவர் நாய் வளர்ப்பையே தம் தொழிலாகக் கொள்ள முடிவு செய்து விட்டார்.

1954-ல் ஒல்ட்ரினியின் பெற்றோர்கள் உதகையில் குடியேறியபோது இவரும் அதைத் தம் வாசஸ்தானமாக்கிக் கொண்டார். சுமார் ஆயிரம் பவுன் (இருபதாயிரம் ரூபாய்) முதலீட்டில் தரமான அல்சேஷியன் நாய்களை ஜெர்மனி, பிரிட்டன், அயர்லாந்து முதலிய இடங்களிலிருந்து தருவித்துப் பண்ணை தொடங்கினார்.

நாயில் எத்தனையோ இனங்கள் இருப்பினும் இவர் அல்சேஷியனைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணமுண்டு. நாய்களில் மிகுந்த அறிவுக் கூர்மை, அன்பு, அழகு யாவும் உடையது அல்சேஷியனே. அவற்றை எளிதில் பயிற்றுவிக்க முடிகிறது. அவற்றின் உயரமும் பருமனும் திட்டமாக உள்ளன. அவை உயிரைக் கொடுத்தேனும் எஜமான விசுவாசம் காட்டுபவை. பல அல்சேஷியன்களை ஒருவர் வளர்த்தாலும் அவை ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொள்வதில்லை.

அல்சேஷியன் நாய்களின் சரித்திரத்தைப் பார்ப்போமே! ஸ்விட்ஜர்லாந்துக்கு வடக்கேயுள்ள அல்ஸேஸ் பகுதிதான் இவற்றின் தாயகம்; அல்லது 'நாயகம்'. எனவே இவற்றை ஜெர்மானிய இனம் எனலாம். ஆரம்ப காலத்தில், மேய்ச்சலின்போது உதவவே இவை அங்கு வளர்க்கப்பட்டன. இவற்றின் அறிவுக்கூர்மை புலனானபின்தான் வீடுகளில் காவல் நாயாகவும், போலீஸ் நாயாகவும் பயிற்றுவிக்கப்பட்டன. இன்று இவை ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் கண்ணிழந்தோருக்குக் கண்ணாகவே பயன்படுகின்றன. மிகவும் உஷாரான இந்த நாய்களின் கவனத்திலிருந்து எதுவுமே தப்புவதில்லை. இவற்றுக்குப் பயமே கிடையாது. எனினும், ஐயுறவானவர்களிடம் ஐயம்



ஒல்ட்ரினியும் அருமை நண்பர்களும்

கொள்ளத் தயங்குவதில்லை. இவற்றின் சீலத்தை எந்த லஞ்சத்தாலும் குலைக்க முடியாது. இவற்றின் விவேகமும் பகுத்துப் பார்க்கும் சாதுரியமும் அதிசயமானவை. குளிர்ப் பிரதேசங்களில் பிறந்தவையே எனினும் இவை உஷ்ணப் பிரதேசங்களிலும் சமாளித்துக் கொள்கின்றன. இன்று அல்சேஷியன் வளர்க்கப்படாத தேசமே இல்லையாம்!

இவற்றின் இல்லற வாழ்வு: இரண்டு வயதான பெண் நாயைப் புணர்ச்சிக்கு விடலாம். ஆறுமாதத்துக்கொரு முறை இதற்கு வேட்கை பிறக்கும். ஒன்று விட்டு ஒரு வேட்கைக்கு இதைத் தாம்பத்தியத்தில் விடலாம். இதன் சினைக் காலம் ஒன்பதே வாரங்கள்தான். ஓர் ஈற்றில் ஒன்றிலிருந்து பதினாறு குட்டிகள் வரை ஈனக்கூடும். ஒரே ஈற்றுக் குட்டிகளில் ஆணினம், பெண் இனம் இரண்டுமாக இருப்பதுண்டு.

முதல் மூன்று வாரங்களுக்குக் குட்டிகள் தாய்ப் பாலிலேயே வளருகின்றன. அதன் பிறகே இவர் சிறிது சிறிது புலால், பசும் பால், பாலுணவு முதலியவை சேர்க்கிறார். ஆறு வாரங்களோடு தாய்ப்பால் நின்று விடுகிறது. அதோடு தாய் — சேய் உணர்வும் போய்விடுகிறது. ஆறு வார நாய்க் குட்டிக்கு ஐந்து வேளை உணவு கொடுக்கிறார் ஓல்ட்ரினி. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக ஐந்து வேளையை நாலு, மூன்று, இரண்டு என்று குறைத்து, அதே போதில் ஒவ்வொரு வேளைக்குமுள்ள ஆகாரத்தை அதிகமாக்கி வருகிறார். ஒரு வயசிலிருந்து இவை மரிக்கும் வரை இரண்டு வேளை உணவே அளிக்கிறார்.

நாய்களின் ஆயுட் காலம் பன்னிரண்டு ஆண்டுகள். (மனிதனின் ஓராண்டை இவை ஏழாண்டுகளாகக் கருதுகின்றன.) மாட்டு அல்லது ஆட்டு மாமிசத்தோடு சாதம், சப்பாத்தி, முட்டை, பால், மல்டி விடமின் மாத்திரை, கருமீன் எண்ணெய் எல்லாம் தர வேண்டும் என்கிறார். வளர்ச்சியுற்ற நாய்களுக்கு எலும்பு தரக் கூடாது என்கிறார். 'அல்சேஷியன்' வளர்ப்பதற்கு முன் இரண்டு விஷயங்களுக்குத் தயாராயிருக்க வேண்டுமாம்: முதலாவதாக ஒரு நாய்க்குத் தினம் இரண்டு ரூபாய்களாவது செலவழிப்பது; இரண்டாவதாக இவற்றைக் கட்டிப் போடாமல் சுயேச்சையாகத் திரிய இடமளிப்பது என்கிறார்.

ஜோடி நாயாக வளர்த்தல் ஸௌக்கியம்; தனியாக வளர்த்தாலும் அது மனிதர்களுடன் ஒட்டி வாழும்.

இந்நாய்களை எப்படிச் சுத்தமாக வைத்திருப்பது என்று கேட்டதற்கு ஓல்ட்ரினி தந்த விடை: ''இயற்கையிலேயே எல்லா நாய்களும் சுத்தமானவை. அவை அழுக்கடைந்தாலன்றிக் குளிப்பாட்ட வேண்டியதில்லை. காலையிலும் மாலையிலும் பிரஷ் போட்டுத் துடைத்தாலே போதும், அதன் சருமம் பளபளக்கும். நாய்கள் மிக அழுக்கடையாததற்குக் காரணம் அவற்றுக்கு நம்மைப்போல வியர்ப்பதில்லை. அவற்றின் நாக்கு வழியாகவும், பாதத்திலுள்ள கெட்டித் திசு வழியாகவுமே அவை வியர்வையை வெளிவிடுகின்றன. இரைக்க இரைக்க நாய் நிற்கும் போதே அதன் வியர்வை போய் விடுகிறது. இதனால்தான் அவற்றின் உடலிலிருந்து துர் வாடை வருவதில்லை.''

பிறக்கும்போது ஒரு பவுன்ட் எடையேயுள்ள அல்சேஷியன், இரண்டு ஆண்டுகளில் ஆணாயின் எண்பது பவுன்ட் எடைக்கும், பெண்ணாயின் எழுபது பவுன்ட் எடைக்கும் வளர்கின்றன. வீட்டில் வளர்ப்பதற்கு ஆணை விடப் பெண்ணே ஸௌக்கியம். அவற்றுக்குப் பரிவு உணர்ச்சி அதிகம்.

ஆண்டொன்றுக்குப் பத்திலிருந்து பதினைந்து குட்டி வரை விற்பனை செய்கிறார் ஸ்ரீ ஓல்ட்ரினி. முக்கியமாக ஒரு நாய்க்குட்டியின் பாரம்பரியத்தைப் பார்த்தே அது வாங்கப்படுகிறது. ஐரோப்பாவில் ஆறு மாதமுள்ள ஒரு ஜாதிக் குட்டி ரூ. 10,000 (500 பவுன்ட்) வரை விலை போகிறது. இந்தியாவில் இரண்டு மாதக் குட்டி நானூறிலிருந்து ஆயிரம் ரூபாய் வரை விலை போகிறது. சென்னை போலீசுக்கு ஒன்பது நாய்களும், கோவை போலீசுக்கு மூன்று நாய்களும் விற்றுள்ள ஓல்ட்ரினி மொத்தம் இந்தியாவில் போலீசுக்கும் ராணுவத்துக்குமாக இருபது நாய்கள் விற்றிருக்கிறார்.

இந்தியா 'கென்னல் கிளப்'பில் நாய்களைப் பதிவு செய்கிறார்கள். பல நாய்ப் பண்ணைகளிருப்பினும் அல்சேஷியன் வளர்ப்பதற்குச் சுமார் ஒரு டஜன் பண்ணைகளே அதிகாரபூர்வ அங்கீகாரம் பெற்றுள்ளன. ஓல்ட்ரினியுடைய பண்ணையில் வளர்க்கப்படும் நாய்களுக்கு ஒரு தனிப் பெயர் உண்டு. 'வான் ஓல்டன்பெர்க்' என்பதே அது.

இவர் நாயுடன் ரயில் பிரயாணம் செய்கையில் ஒரு விநோதம் நடந்தது. அதை இவரது வாய்மொழியாகவே கேட்போம்:

''பெங்களூரில் ஒரு நாய்க் காட்சிக்குச் சென்றுவிட்டு, உதகைக்கு முதல் வகுப்பில் திரும்பிக் கொண்டிருந்தேன். நள்ளிரவில் ஜோலார்ப்பேட்டைச் சந்திப்பில் வேட்டியும் சட்டையும் போட்டிருந்த ஒரு பிரயாணி என் பெட்டியில் ஏறினார். பெர்த்தின் கீழிருந்த பெரிய பிராணியைக் கண்டு அவர் சிறிதே துணுக்குற்றதாகத் தோன்றியது. சிறிது நேரம் பேசாதிருந்துவிட்டு என்னைப் பார்த்து, 'இது என்ன?' என்று கேட்டார். அவரைச் சிரிப்பூட்ட வேண்டுமென்று நினைத்து, 'இது ஒரு சிங்கக் குட்டி. உதகைக்குக் கொண்டு போகிறேன்' என்றேன். 'நான் மேல் 'பெர்த்'தில் படுத்துக் கொண்டால் ஒன்றும் செய்யாதே?' என்று கேட்டார். 'பயப்படாமல் தூங்குங்கள் ஒரு தீங்கும் செய்யாது' என்றேன். கோவையில் அவசரம் அவசரமாக இறங்கினவர், பிளாட்பாரத்திலிருந்த என்னை எட்டிப் பார்த்து, 'சிங்கக் குட்டியுடன் ஒரே பெட்டியில் பிரயாணம் செய்கிற பெரும் அநுபவத்தைத் தந்த உங்களுக்கு நன்றி' என்றார் !''

கர்னல் ஓல்ட்ரினியைப் பார்த்து வந்த பின் எனக்கும் அல்சேஷியன்களிடம் ஈடுபாடு வளர்ந்துள்ளது. உங்களுக்கும் அப்படிப்பட்ட ஆர்வம் எழுமாயின் இதோ நாய் வளர்க்கும் நாயகரது விலாசம்:

Lieut.-Col. D. K. Oldrini, O.B.E. (N.C.),
Korea House, Havelock Road, Ootacamund.

# கல்லுக்குள் ஈரம்

ர.சு.நல்லபெருமாள்

வெள்ளி விழா இரண்டாவது பரிசு நாவல்

## அத்தியாயம் 37

## பெண் ஒரு புதிர்

**கா**ரை விட்டு இறங்கிய கமலவாசகி, கதவைப் படாரென்று அறைந்து சாத்தி விட்டு சூறாவளியாக வீட்டினுள் நுழைந்து தன் அறைக்குள் போய்க் கட்டிலில் விழுந்து குமுறிக் குமுறி அழுதாள். பலவித உணர்ச்சிகள் உள்ளத்திலே பொங்கிக் கண்ணீராக வெளி வந்து கொண்டிருந்தன.

கமலவாசகி வந்தபோது வராந்தாவின் ஓரத்தில் நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த சிவானந்தம், அவளுடைய போக்குப் புரியாமல் திகைத்தான். அவளைத் தொடர்ந்து அறைக்குள் நுழைந்தபோது, அவள் கட்டிலில் விழுந்து குலுங்கிக் குலுங்கி அழுததைக் கண்டு துணுக்குற்றான். வாஞ்சையோடு அவள் தோள்களைத் திருப்பினான்.

''என்ன கமலா, என்ன நடந்தது?'' ஆதங்கத்தோடு கேட்டான்.

''ஐயோ, என்னைக் கொஞ்ச நேரம் நிம்மதியாக இருக்க விடுங்களேன்'' என்று இரைந்து கத்தினாள். அவளுடைய கோபத்தைக் கண்டு சிவானந்தம் அதிர்ந்து விட்டான். அவளுடைய முகத்தில் கசப்பும் கோபமும் கொந்தளித்ததைக் கண்டு அவனே பயந்து விட்டான். ஒன்றும் புரியாமல் வராந்தாவுக்குத் திரும்பினான். வெங்கு பயந்தபடியே வராந்தாவில் நின்று கொண்டிருந்தான்.

''என்ன நடந்தது? கமலா ஏன் அழுகிறாள்?'' என்று கேட்டான் சிவானந்தம்.

''பிரமாதம் ஒன்றும் இல்லை. திரிவேணியின் வீட்டுக்கு இவளையும் அழைத்துச் சென்றேன். வீட்டுக்குள் நுழைந்து விட்டுப் பிறகு திடீரென்று கோபத்துடன் வந்து விட்டாள்.'' என்றான் வெங்கு.

''திரிவேணி வீட்டுக்கு இவள் வந்தாளா? நம்ப முடியவில்லையே. அவளைக் கண்டாலே இவளுக்குப் பிடிக்காதே.''

''நான்தான் வற்புறுத்தினேன். நம்முடைய காரில்தான் திரிவேணியும் வந்தாள் கார் அவள் வீட்டை அடைந்ததும் திரிவேணி இவளையும் வீட்டுக்குள் வரும்படி அழைத்தாள்.''

''ஓ.....அப்புறம்?''

''அத்தையைக் கூப்பிடத் திரிவேணி உள் பக்கம் போயிருந்தபோது இவள் என்ன நினைத்தாளோ, திடீரென்று சொல்லிக் கொள்ளாமலே கோபமாக வந்துவிட்டாள்.''

''சேச்சே..... அப்படி வந்தால் திரிவேணி நம்மைப் பற்றி என்ன நினைப்பாள்...'' என்று கூறிக் கொண்டே சிவானந்தம் பரபரப்புடன் ஃபோனை எடுத்துத் திரிவேணியுடன் பேசினான்.

''ஹலோ, மிஸ். திரிவேணியா...? நமஸ்காரம்.... சிவானந்தம் பேசுகிறேன்...''

''நமஸ்காரம்...'' மறு பக்கத்திலிருந்து திரிவேணி பேசினாள்.

''கமலாவுக்கு இன்று உடம்பு சரியில்லை... அதனால்தான் திடீரென்று உங்களிடம் சொல்லாமலே வந்து விட்டாள்... மன்னித்துக்கொள்ளுங்கள்.''

''மனது சரியாயிருக்கிறதா?'' — திரிவேணி சிரித்தது போனில் கேட்டது.

''ஹி...ஹி... பாம்பின் கால் பாம்புக்குத்தான் தெரியும்.'' என்றான் சிவானந்தம்.

''பாம்பு தெரிந்து கொண்டதே.''

''மன்னித்துக் கொள்ளுங்கள். கமலா, திடீரென்று வந்துவிட்டதைத் தவறாக எடுத்துக் கொள்ளக் கூடாது. மன்னிக்க வேண்டும்.''

''உங்கள் மனைவியிடம் நான்தான் மன்னிப்புக் கேட்க வேண்டும். பள்ளி ஆண்டு விழாவில் அவர்களுடைய பேச்சை மறுத்துப்



பேசிவிட்டேன். அதனால் அவர்களுக்கு என் மீது கோபமாக இருக்கலாம்... நான் மன்னிப்புக் கேட்டதாகத் தெரிவியுங்கள்.''

சிவானந்தம் போனைக் கீழே வைத்தபோது பின்னாலிருந்து புலி உறுமுவது போலிருந்தது.

''ஏன், அவள் காலிலே போய் விழுவது தானே'' என்று கர்ஜித்துக் கொண்டு அறை வாசலில் பத்திரகாளி மாதிரி நின்று கொண்டிருந்தாள் கமலவாசகி.

''உனக்கு இன்று என்ன வந்துவிட்டது?'' வியப்புடன் கேட்டான் சிவானந்தம்.

''அவளிடம் என்ன மன்னிப்பு வேண்டியிருக்கிறது?''

''பண்பில்லாமல் நடந்து கொண்டாயே அதற்காக நான் மன்னிப்புக் கேட்டேன். உண்மையில் மன்னிப்புக் கேட்க வேண்டியவன் நீ...'' என்று எரிச்சலோடு சொன்னான்.

''பெரிய மன்னிப்பு'' — அலட்சியமாக முகத்தை அசைத்தாள். பிறகு சொன்னாள்:

''அவளிடம் நான் என்ன மன்னிப்புக் கேட்பது? அவளுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? இந்தப் பித்துக்குளியால் தான் அவள் வீட்டுக்குள் போக வேண்டி வந்து விட்டது. அவளிடம் மன்னிப்புக் கேட்க அவள் எந்த விதத்தில் உயர்ந்து விட்டாள்?''

''நீ பெரிய போலீஸ் அதிகாரியின் மனைவியாக இருக்கலாம்; பெரிய ஜமீன்தாரின் மகளாக இருக்கலாம். பிறரை அவமதிப்பதன் மூலம்தான் இந்தப் பெருமைகளைப் பறைசாற்ற வேண்டுமா?'' என்றான் சிவானந்தம் வெறுப்புடன்.

''அவள் என்னைப் பற்றி என்ன நினைக்கிறாள் என்பதில் எனக்கு அக்கறை இல்லை''— அலட்சியமாகப் பதில் சொன்னாள் கமலவாசகி.

''நீ அக்கறை கொள்ளாமல் இருக்கலாம். நீ ஜமீன்தாரின் மகளாக மட்டுமிருந்தால் அதைப் பற்றி நானும் கவலைப்பட மாட்



டேன். என்னுடைய மனைவியாகவும் இருக்கிறயே.''

கமலவாசகிக்கு நெஞ்சில் சுரீர் என்று தைத்தது. சிவானந்தத்தை முறைத்துப் பார்த்தாள்.

''அதற்காகக் கண்டவர்களிடமெல்லாம் காலில் விழுந்து கும்பிடச் சொல்கிறீர்களா? எனக்கு உங்களைப்போல் கோழையாக இருக்கத் தெரியாது'' என்ருள் படபடப்புடன்.

''பண்புடன் நடந்து கொள்வது கோழைத்தனமா? பெருந்தன்மைக்கும் உனக்கும் சம்பந்தமே இல்லை போலிருக்கிறது'' என்று கூறிக் கொண்டே ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு சோபாவில் சாய்ந்தான் சிவானந்தம். பிறகு சொன்னன்:

''நீ மன்னிப்புக் கேட்க வேண்டியிருக்க, அவள் உன்னிடம் மன்னிப்புக் கேட்கிருள். அதுவல்லவா பண்பு! படித்துவிட்டால் மட்டும் 'போதுமா?'' — அலட்சியமாகப் புகையை வெளியே ஊதினன் சிவானந்தம். கமலவாசகியின் உள்ளம் பற்றி எரிந்தது. திரிவேணியைத் தன்னுடன் ஒப்பிட்டுப் பார்க்கிருன் என்ற நினைவையே அவளால் தாள முடியவில்லை. உணர்ச்சி வேகத்தில் கண்கள் கலங்கிவிட்டன.

''அந்தக் கேடுகெட்டவளைப் பற்றி என் முன்னுல் பேச வேண்டாம்'' என்று எரிந்து விழுந்து விட்டுக் கலங்கிய கண்களுடன் தன் அறைக்குள் நுழைந்து விட்டாள் கமலவாசகி.

''பொறுமையைத்தான் உருட்டித் திரட்டி பெண்ணுகப் படைத்துக் கடவுள் அனுப்பி வைக்கிறர் போலிருக்கிறது'' என்று முனகிக் கொண்டே சிகரெட் புகையை நீள உறிஞ்சினன், சிவானந்தம். திரிவேணியின் பெருந்தன்மை அவன் நினைவில் இனித்தது.

அன்று இரவு முழுவதும் கமலவாசகி தூங்கவேயில்லை. வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்ட மாதிரி கடந்த கால நினைவுகள் அவளிடம் தொற்றிக் கொண்டன. ரங்கமணி தனக்குக் கிடைக்கவில்லையே என்ற ஏமாற்றம், உள்ளத்தில் கோபமாகக் குமுறிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

''காதலாம் காதல்... உண்மையாக என்னிடம் காதல் கொண்டிருந்தால், இன்று திரிவேணியைக் காதலிப்பாரா?... எல்லாம் வேஷந்தான்.'' — கமலவாசகியின் மனம் முணு முணுத்தது.

பக்கத்துக் கட்டிலில் சிவானந்தம் தூக்கத்தில் புரண்டான். அறை இருட்டிக் கிடந்ததால் அவனுடைய உருவம் தெரியவில்லை. அவன் மூச்சு விடும் சப்தந்தான் கேட்டது. கமலவாசகி, கட்டிலிலிருந்து எழுந்து அறைக் கதவைத் திறந்து கொண்டு வராந்தாவுக்கு வந்தாள். வெளியே நிலவு வெள்ளியாக உருகிக் கொண்டிருந்தது. எங்கும் நிசப்தம். தூரத்தில் எங்கோ ஒரு மரத்திலிருந்து கோட்டான் அலறியது. எதையோ கண்டு மிரண்ட ஆந்தை ஒன்று பக்கத்து மரத்தி லிருந்து படபடத்துக் கொண்டு பறந்து சென்றது. சிறிது நேரம் வராந்தாவில் கிடந்த சோபாவில் சாய்ந்தவாறு வானத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் கமலவாசகி. வானத்தில் வைரங்கள் சிதறிக் கிடந்தன. அவள் மனத்தில் துயரங்கள் கவ்விக் கிடந்தன.

நடுநிசி வேளையில் தூக்கமில்லாமல் பேய் மாதிரி இப்படி உட்கார்ந்திருக்கிறேமே என்று எண்ணித் தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டாள். அந்தச் சிரிப்பில் வேதனைதான் கொப்பளித்தது.

ரங்கமணியைப் பற்றிய பழைய சம்பவங்கள் அனைத்தையும் ஏதோ ஒரு கெட்ட சொப்பனமாக எண்ணி, நினைவிலிருந்தே களைந்துவிடத்தான் முயன்ருள். அந்த நினைவுகள் எண்ணத்தில் தோன்றியபோதெல்லாம் அவள் மனம் நடுங்கியது. அவனுடைய நினைவு வருவதே தவறுதான் என்று அவள் மனம் குற்றம் சாட்டிக் கொண்டுதான் இருந்தது. ஆனல் நினைவிலிருந்து அவன் மட்டும் மறைய மறுக்கிருனே. இப்போது அவன் திரிவேணியின் மேஜை மீது தோன்றிக் கமலவாசகியின் மன அமைதியைக் குலைத்து விட்டான்.

கமலவாசகியின் நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. மடியிலிருந்த வைரக் குவியலை வேண்டுமென்றே அசட்டுத்தனமாக மணலில் சிதறவிட்டதாக ஒரு பரிதாபத் தவிப்பு. தன்மீதே அவளுக்கு வெறுப்புத் தோன்றியது.

வராந்தா சோபாவிலேயே வெகு நேரம் உட்கார்ந்திருந்தாள். வீட்டுக்குள்ளிருந்த கடிகாரம் இரண்டு மணி அடித்தது. நிலவும் நிசப்தமும்தாம் துணை இருந்தன. நினைவு பாடாய்ப் படுத்திக் கொண்டிருந்தது. வெகு நேரத்துக்குப் பிறகு, சோபாவில் சாய்ந்தவாறே உறங்கிவிட்டாள். யாரோ தீண்டுவது போல் தோன்றவே திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள். ஒரு குழந்தையைத் தூக்குவது போல் சிவானந்தம் அவளைத் தூக்கிக் கொண்டிருந்தான்.

''என்ன கமலா இப்படி?... இங்கேயே தூங்கிவிட்டாய்?'' என்று வாஞ்சையோடு கேட்டுக் கொண்டே அவளை அணைத்தபடி அறைக்குள் தூக்கிச் சென்ருன் சிவானந்தம். இரவு முழுவதும் நினைவுச் சுழலில் சிக்கித் திணறி அலுத்தவளுக்குக் கணவனின் அணைப்பும் கனிவான பேச்சும் இதமாயிருந்தன.

இவ்வளவு அருமையான கணவன் இருக்கும்போது, இந்த மனம் ஏன்தான் இப்படிப் பழைய நினைவைத் தீண்டித் தடுமாறுகிறதோ...?

கணவனை உற்றுப் பார்த்தாள். அவனுடைய களை சொட்டும் கம்பீரமான முகமும், அவள் மீது அவன் வைத்திருக்கும் அன்பும் அவள் மனத்தை என்னவோ செய்தன. அறைக்குள் வந்ததும் அவளைக் கட்டிலில் படுக்க வைத்து விளக்கை அணைத்துப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான் சிவானந்தம். நிலவு ஜன்னல் வழியாக உள்ளே புகுந்து படுக்கையிலும் விழுந்து கொண்டிருந்தது. கண் கொட்டாமல் அவளையே பார்த்தான் சிவானந்தம். அந்தப் பார்வை அவள் இதயத்தில் நுழைந்து உள்ளே ஒட்டியிருக்கும் பழைய நினைவுகளின் அழுக்குகளைக் கழுவித் துடைக்க முயலுவது போல் இருந்தது. திடீரென்று என்ன நினைத்தாளோ,

விசேஷ
அளிப்பு !

ஸ்டாக் உள்ளவரை

~~60~~ பைசா
மதிப்புள்ள அழகான
பிளாஸ்டிக் டம்ளர் இந்த
டப்பாவினுள் உங்களுக்காக
10 பைசாவிற்கு
மட்டுமே!







சக்திக்கும் வலிமைக்கும் - காட்பரீஸ் போர்ன் விடா !

மெதுவாகக் கையை அவன் கழுத்தைச் சுற்றிப் போட்டு— வளைத்து அவன் முகத்தைத் தன் பக்கமாக இழுத்தாள். சிவானந்தம் குனிந்தான். இருவர் கன்னங்களும் உறவாடின. அவன் கழுத்தை அணைத்த கை இறுக்கியது. அந்த இறுக்கத்தில் கமலவாசகியின் கோபமும் தாபமும் கரைந்து விட்டதை உணர்ந்தான் சிவானந்தம். அவளை அப்படியே வாரி எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டான். அந்த அணைப்புக்குள் குழந்தையைப் போல் ஒடுங்கினாள் கமலவாசகி. அன்பின் இறுக்கம் அவள் கண்களில் நீரைப் பெருக்கியது. அவனுடைய பரந்த மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு பொங்கிப் பொங்கி அழுதாள். அவளை அப்படியே சிறிது நேரம் அழவிட்டுவிட்டான். கண்ணீரில் அவளுடைய கடந்தகால நினைவையும் துடைத்திருந்தாள்..

சிவானந்தத்தின் மார்பிலே தலையைச் சாய்த்தவாறு தூங்கத் தொடங்கினாள். அவளுடைய தலை முடிக்குள் விரல்களைக் கொடுத்து மெதுவாக வருடிக் கொண்டிருந்தான் சிவானந்தம்.

கமலவாசகி அவனுக்கு ஒரு புதிர். வெய்யிலும் மழையும் ஒரே சமயத்தில் தோன்றுவது போல்தான் அவளுடைய உணர்ச்சிகளும். அவைகளுக்கு அவளாலேயே சரியான காரணம் கூற முடியாது என்பதுதான் சிவானந்தத்தின் முடிவு. புயல் மாதிரி சாடிவிட்டுப் பிறகு தென்றல் மாதிரி குழைவாள். வெறி வந்தவளைப் போல் கூச்சவிட்டுவிட்டுப் பிறகு ஒரு குழந்தையைப் போல் சிணுங்குவாள். ஜமீன்தாரின் ஒரே மகனாக மிகவும் செல்வமாக வளர்ந்துவிட்ட தோஷம்தான் இது என்று நினைத்துத் தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். அவளை மார்பில் தாங்கியபடியே சிவானந்தமும் கண்ணயர்ந்தான்.

காலையில் மணி ஏழாகியும் சிவானந்தம் எழுந்திருக்கவில்லை. பக்கத்து அறையில் ஃபோன் மணி அலறியபோதுதான் விழித்தான். ஆனால் எழுந்திருக்க முடியவில்லை. மார்பின் மீது கமலவாசகி தலைவைத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவளை எழுப்பவும் மனமில்லை. ஃபோன் மணியோ கூப்பிட்டுக் கொண்டிருந்தது. சற்று அசைந்தாலும் அவள் விழித்துக் கொள்வாள் என்று பயந்து அசையாமல் அவனும் படுத்துக் கிடந்தான். சிறிது நேரம் ஃபோன் மணி அலறிவிட்டு ஓய்ந்து விட்டது. கொஞ்ச நேரம் கழித்து மீண்டும் மணி அடித்தபோது கமலவாசகி விழித்துக் கொண்டாள். அவன் மெதுவாக எழுந்திருக்க முயன்றான். ஆனால் அவளோ தன் கையை வளைத்து அவன் கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொண்டு சிணுங்கினாள். ஃபோன் அலறிக் கொண்டே இருந்தது. கோபத்தோடு எழுந்து, ஃபோனை எடுக்க விரைந்தாள். அவள் போவதைப் பார்த்து ரசித்துக் கொண்டே படுத்துக் கிடந்தான் சிவானந்தம்.

''ஹலோ... யாரு...?'' — எரிச்சலோடு கேட்டாள் கமலவாசகி.

''ஹலோ! எஸ்.பி. பேசுகிறேன். டெபுடியைக் கூப்பிடுங்கள்'' என்று ஃபோனின் மறுபக்கத்திலிருந்து பதில் வந்தது. கமலவாசகி பரபரப்புடன் படுக்கை அறைக்குள் ஓடிவந்தாள்.

''உங்களை எஸ். பி. கூப்பிடுகிறார்.'' என்றாள். சிவானந்தம் படுக்கையிலிருந்து எழுந்து ஓடிச் சென்று ஃபோனை எடுத்தான். மேலதிகாரியின் பேச்சுக்கு ''சரி சரி'' என்று மட்டும் பதில் சொல்லிக் கொண்டு வந்தான். இடையிடையே வியப்பினாலும், அதிர்ச்சியாலும் அவன் முகம் மாறுதலடைந்ததைக் கண்டாள் கமலவாசகி. பேசி முடித்துவிட்டுக் கவலையோடு ஃபோனைக் கீழே வைத்தான்.

''என்ன விஷயம்?'' — கமலவாசகி கேட்டாள்.

''எல்லாம் இந்தக் காங்கிரஸ்காரர்கள் தொந்தரவுதான்'' என்று அலுத்துக்கொண்டான். கமலவாசகி புருவத்தை வளைத்துக் கேள்வியைப் பார்வையில் தேக்கினாள்.

''காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நேற்று பம்பாயில் முடிந்து விட்டதாம். புரட்சித் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்களாம். அதிகாலையில் தலைவர்கள் அனைவரையும் பம்பாயிலேயே கைது செய்தாகிவிட்டதாம். இதைத் தொடர்ந்து ஏதாவது கலவரம் நடக்கலாமாம். எச்சரிக்கையாக முன் கூட்டியே பாதுகாப்பு நடவடிக்கை எடுக்கும்படி உத்தரவு வந்திருக்கிறது'' என்றான் சிவானந்தம் சலிப்புடன்.

''தலைவர்கள் அனைவரையும் கைது செய்த பிறகு மற்ற சோதாக்களால் என்ன செய்து விட முடியும்?'' என்று அலட்சியமாகச் சொன்னாள் கமலவாசகி.

''இது சாதாரண விஷயமல்ல. தலைவர்களை ஒரே சமயத்தில் கைது செய்தது பெரிய தவறு. மக்கள் பொங்கி எழுந்தால் என்ன செய்வது? இது எங்கே போய் முடியுமோ? வேதனையை வலிய இழுத்துக் கொண்டது அரசாங்கம்'' என்று சலிப்புடன் கூறினான் சிவானந்தம்.

''ஒன்றும் நடக்காது. எல்லாமே தானாக அடங்கி விடுவார்கள்.''

''அப்படியென்றால் கவலை இல்லையே. மக்கள் கொந்தளிப்பார்கள் என்று அரசாங்கம் பயப்படுவதனால்தானே இவ்வளவு பரபரப்புடன் அதிகாரிகளை எச்சரிக்கிறார்கள்.''

''நீங்கள் இப்படிச் சோர்ந்து போவானேன்? உங்களுக்கு இது நல்ல சந்தர்ப்பம். அடக்கு முறையால் புரட்சியை ஒடுக்கி விடுங்கள். உங்கள் பதவி உயர்ந்துவிடும்.''

''பதவிக்காக என்னை மிருகமாகச் சொல்கிறாயா?''

''மிருகமாகும் வெறியர்களைத்தான் அடக்கச் சொல்கிறேன். இந்த முறையாவது சற்றுக் கடுமையாக நடந்து கொள்ளுங்கள். விளக்கெண்ணெய் மாதிரி இருக்காதீர்கள். கள்ளுக் கடை மறியலில் உங்களுக்கு மேலதிகாரிகளிடம் கெட்ட பெயர்தான் கிடைத்தது. அதை மறந்துவிடாதீர்கள்'' என்றாள் கமலவாசகி.

பெரிய பொறுப்பு தலையில் ஏறிவிட்டதால் மனம் சோர்ந்திருந்தான் சிவானந்தம்.

அன்று மாலை மூன்று மணி இருக்கும். சிவானந்தத்தின் வீட்டின் முன்னால் ஒரு ஜீப் கார் வந்து நின்றது. அதிலிருந்து போலீஸ்

இன்ஸ்பெக்டரும், சப் இன்ஸ்பெக்டரும் பரபரப்புடன் இறங்கி விரைந்து வீட்டுக்குள் வந்தார்கள். முதல் அறையில் சிவானந்தனும் கமலவாசகியும் இருந்தார்கள். சிவானந்தத்துக்கு ஒரு ஸல்யூட் அடித்துவிட்டு, வந்தவர்கள் இருவரும் பவ்வியமாக நின்றார்கள்.

"என்ன?" — சிவானந்தம் கேட்டான்.

"நாளை மறுநாள் ஊர்வலம் நடத்திக் கொடி ஏற்றுவதாகத் திரிவேணி அறிக்கை விட்டிருக்கிறாள். ஊர் முழுதும் ஹர்த்தால் நடக்க வேண்டும் என்றும் அறிக்கை விட்டிருக்கிறாள்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"எந்த இடத்திலிருந்து ஊர்வலம் புறப்படுகிறது? எங்கு கொடி ஏற்றப் போகிறார்கள்?" என்று நிதானமாகக் கேட்டான் சிவானந்தம்.

"ஊர்வலம் ஜங்ஷன் ரயில் நிலையத்திலிருந்து மாலை நான்கு மணிக்குப் புறப்படுகிறது. அது டவுன் ரயில்வே பீடர் ரோடுக்கு வந்து கொடி ஏற்றப் போகிறார்களாம்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"அதற்காக நீங்கள் பதறியடித்துக் கொண்டு இங்கே ஓடி வருவானேன்?" என்று இடைமறித்துக் கேட்டாள் கமலவாசகி. அவளுடைய குரலில் தொனித்த அலட்சியமும், கேலியும் இன்ஸ்பெக்டரைத் திகைக்க வைத்தன.

"ஊர்வலம் நடந்தால் ஏதாவது கலவரம் ஏற்படுமே....அதற்காகத்தான்..." என்று இழுத்தார் இன்ஸ்பெக்டர்.

"உங்களுக்கு இப்படி வந்து சொல்ல வெட்கமாயில்லை? ஒரு பெண் பிள்ளையின் அறிக்கையைப் பார்த்துப் பயந்து சாகிறீர்களே" என்று கேட்டாள் கமலவாசகி. அவளுடைய பேச்சு சிவானந்தத்தையே அதிர வைத்துவிட்டது.

"அறிக்கைதானே விட்டிருக்கிறாள்...." என்றார் இன்ஸ்பெக்டர் பவ்யமாக.

"அறிக்கை அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் என்று கூறி இதற்குள் அவளைக் கைது செய்வதை விட்டு விட்டு இங்கே வந்து இப்படிப் பதறி நிற்கிறீர்களே" என்றாள்.

"திரிவேணியைக் கைது செய்தால் ஊரே திரண்டுவிடும்" என்றார் பக்கத்தில் நின்ற சப் இன்ஸ்பெக்டர், சற்று பயத்துடன்.

"ஓ... ஊரே திரண்டுவிடுமா...பேசாமல் வீட்டில் போய் முக்காடு போட்டு முடங்கிக் கொள்ளுங்கள். இல்லையென்றால் ஒரு சேலையைக் கட்டிக் கொள்ளுங்கள்" என்றாள் கமலவாசகி எரிச்சலுடன். சப் இன்ஸ்பெக்டர் பயத்தால் நடுங்கினார். சிவானந்தம் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். கமலவாசகி குறுக்கிட்டுப் பேசியது அவனுக்குத் தர்மசங்கடமாக இருந்தது.

"சரி, மாஜிஸ்டிரேட்டிடம் சென்று 144 தடை உத்தரவு வாங்குங்கள். தடை உத்தரவை உடனே தண்டோரா போட்டு ஊர் முழுவதும் அறிவித்து விடுங்கள். சீக்கிரம் இதைச் செய்யுங்கள்" என்றான் சிவானந்தம். இன்ஸ்பெக்டர்கள் இருவரும் சல்யூட் அடித்து விட்டு அந்த இடத்தை விட்டு விரைந்து சென்றார்கள்.

"நீ குறுக்கே பேசியது நன்றாக இல்லை. இப்படியா அவர்களைத் தாக்கிப் பேசுவது?" என்றான் சிவானந்தம்.

"பின்னே என்ன? திரிவேணி அறிக்கை விட்டாளாம். இந்தச் சூரப்புலிகள் பயந்து போய் இப்படி ஓடி வந்திருக்கிறார்கள்."

"என்ன இருந்தாலும் நீ அப்படிப் பேசியிருக்கக் கூடாது. அவர்கள் என்ன நினைப்பார்கள்."

"என்ன நினைப்பார்கள்? தங்களுடைய கையாலாகாத்தனத்தை பற்றி நினைத்துக் கொள்வார்கள். நீங்கள் இப்படிச் சாதுவாக இருக்கப் போய்த்தான் திருநெல்வேலி போலீஸ் டிபார்ட்மெண்டே பயந்தாங் கொள்ளியாக இருக்கிறது. இல்லையென்றால் டி. ஐ. ஜி. அப்படி உங்களை விரட்டியிருப்பாரா?" என்று படபடத்தாள்.

சிவானந்தம் ஒன்றும் பேசாமல் உடையை மாற்றிக் கொண்டு வெளியே கிளம்பினான். அவன் காரில் ஏறப்போகும்போது கமலவாசகி கேட்டாள், "எங்கே போகிறீர்கள் அவசரமாக?"

"ஆபீஸுக்குத்தான்" என்று கூறிவிட்டுக் காரைத் தானே ஓட்டிக் கொண்டு சென்றான்.

ஆனால் அவன் ஆபீஸுக்குச் செல்லவில்லை. நேரே சுயேச்சை அச்சுக்கூடத்துக்குச் சென்றான். அவனுடைய காரை வாசலில் கண்டதும் சோமு திடுக்கிட்டான். ஓடிப்போய் சர்தார் சொக்கலிங்கம் பிள்ளையிடம் சொன்னான். சொக்கலிங்கம் பிள்ளை தம்முடைய அறையைப் பூட்டிவிட்டுப் பரபரப்புடன்



வாசலுக்கு விரைந்தார். அதற்குள் சிவானந்தம், படியேறி அச்சுக்கூடத்துக்குள் வந்துவிட்டான். அவனை வரவேற்று விருந்தினர் அறைக்கு அழைத்துச் சென்றார், சர்தார்.

''ஒரு முக்கியமான விஷயமாக உங்களைத் தேடி வந்திருக்கிறேன்'' என்றான் சிவானந்தம்.

''என்ன?'' — சர்தார் கேட்டார்.

''திரிவேணி அறிக்கை விட்டிருக்கிறாள்.''

''நானும் பார்த்தேன்.''

''எங்களுக்கு மேலிடத்திலிருந்து கடுமையான உத்தரவுகள் வந்திருக்கின்றன.''

''அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?''

''திரிவேணியை அறிக்கையை வாபஸ் வாங்கும்படி சொல்லுங்கள். நாளைக் காலையிலிருந்து 144 தடை உத்தரவு அமுலாகிவிடும். அதை மீறினால் விளைவுகள் விபரீதமாகிவிடலாம்'' என்றான் சிவானந்தம் கவலையுடன்.

''இதில் நான் செய்வதற்கு ஒன்றும் இல்லையே'' என்றார் சர்தார்.

''இதில் நீங்களும் தலையிட்டுத் திரிவேணியைக் கட்டுப்படுத்தித்தான் தீரவேண்டும். நம் இருவருக்குமே இதில் நன்மை இருக்கிறது.''

''நான் சொல்வதை அவள் கேட்கமாட்டாளே. மேலும் இது கட்சி விஷயம். நான் காங்கிரஸ்காரன்கூட இல்லை.''

''திரிவேணியின் தந்தை என்ற முறையில் தான் உங்களைத் தேடி வந்திருக்கிறேன். நான் கடுமையாக நடந்து கொண்டேன் என்று பிறகு நீங்கள் நினைக்கக் கூடாது. அடக்குமுறையைத் தீவிரமாகக் கையாளும்போது விபரீதம் ஏதும் நிகழ்ந்து விடக் கூடாது. உங்களுக்கெல்லாம் நண்பன் என்ற முறையில்தான் நான் இவ்வளவு தூரம் வற்புறுத்துகிறேன்.''

''இதில் நான் தலையிட்டாலும் பயனில்லை மிஸ்டர் சிவானந்தம். திரிவேணியின் பிடிவாதம்தான் உங்களுக்குத் தெரியுமே.''

''நான் சொல்லுகிறேன் என்று கோபித்துக்கொள்ளக் கூடாது. ஒருவேளை ரங்கமணி சொன்னால் கேட்பாளா?'' என்று மெதுவாக இரகசியம் பேசுவது போல் கேட்டான். இதைக் கேட்டுச் சொக்கலிங்கம் பிள்ளை வியப்புடன் புருவத்தை நெளித்து அவனை உற்றுப் பார்த்தார்.

''திரிவேணியும் ரங்கமணியும் உயிருக்குயிராக இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும்'' என்றான் சிவானந்தம் சிரித்துக் கொண்டே.

''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' — சர்தார் வியப்புடன் கேட்டார்.

''முதலில் சந்தேகித்தேன். பிறகு இரகசியப் போலீஸின் அறிக்கையிலிருந்து ஊர்ஜிதம் செய்து கொண்டேன்.

''இரகசியப் போலீஸ் இலாகா இதைக் கூடக் கவனிக்குமா?'' என்று கேட்டுச் சிரித்தார் சொக்கலிங்கம்பிள்ளை. **(தொடரும்)**

---




மிகவும் கருத்து வேற்றுமைகளுக்கும், ஆட்சேப சமாதானங்களுக்கும் இடமாயிருப்பது ஸ்ரீசங்கர பகவத்பாதரின் சரித்திரம். பெரிய பெரிய ஆராய்ச்சி வல்லுநர்களே அவை சம்பந்தமானதொரு முடிவுக்கு இன்னும் வராமல் மாறுபட்டு நிற்கின்றனர்.

அவர் அவதார புருஷர்; மாமுனிவர்; அத்வைத மதஸ்தாபகர்; ஞான பண்டிதர்; வாதில் வல்லவர். இத்தகைய பெரிய பாத்திரத்தை வைத்துக் கொண்டு ஒருவர் நாடகம் எழுத முற்பட்டதையே துணிச்சலான காரியமென்று கூறவேண்டும். அத்துடன் நில்லாமல் அதை அரங்கேற்றவும் செய்து விட்டாரென்றால் என்னத்தைச் சொல்ல!

பாலசங்கரனாகத் தோன்றிய சிறுவன் கமலஹாஸன் நயமாகப் பேசி நன்றாக நடித்திருக்கிறான். ஓர் ஏழை மாதிடம் நெல்லிக் கனியை யாசித்துப் பெற்று, 'கனகதாராஸ்தவம்' பாடும்போது அவன் முக பாவங்கள் அற்புதமாயிருக்கின்றன.

ஸ்ரீ சங்கர பகவானாக வரும் ஹரிஹர சுப்ரமண்யம் அகக் கனிவும், முகக் குழைவும் கொண்டு, தாம் ஏற்ற பாத்திரத்துக்கு ஏற்றம் தந்தார். வடமொழி சுலோகங்களை அருமையாகப் பாடினார்.

ஸ்ரீ சங்கரபகவான் பரகாயப் பிரவேசம் செய்து இல்லறநெறியைப் புரிந்து கொண்டதாக வரும் வரலாற்று நிகழ்ச்சியைக் காட்சியாகக் காட்டாமல், குறிப்பால் உணர்த்தியிருப்பது துறவறத்தின் தூய்மையை உணர்த்துகிறது.

ஆதிசங்கரரின் தாயார் ஆர்யாம்பாளாக வந்த ஸ்ரீமதி லக்ஷ்மி நன்றாய் நடித்தார். சரசவாணியாக வந்து சிறப்பாக நடித்தவர் பி. ஆர். பிரேமா. பிரம்ம ராட்சஸனாகவும், காபாலிகனாகவும் வந்து எல்லோரையும் நடுங்க வைத்தவர் எம். கே. கோபாலன். நாடகத்தில் ஹாஸ்ய விருந்தளித்தவர்கள் கோவிந்தராஜனும், ராணியும்.

திருவெண்காடு ஜயராமன் சுலோகங்களுக்கு இனிமையான இசை அமைத்திருக்கிறார்.

மகாபுருஷரின் கதையை எந்தவிதமான பங்கத்துக்கும் உள்ளாக்காமல் நாடகமாக எழுதியிருக்கும் எழுத்தாளர் ஸ்ரீ பி. ராமமூர்த்தி பாராட்டுக்கு உரியவர்.

## வீ ஐ சே குட்டிக் கதைகள்

தொகுப்பு: கு. அழகிரிசாமி.

வீ ஐ சே என்ற சீன அறிஞர் கி. மு. ஏழாம் நூற்றாண்டுக்கும் ஐந்தாம் நூற்றாண்டுக்கும் இடையே—சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன் — வாழ்ந்தவர். ராஜசபையில் உத்தியோகம் பார்த்தவர்.

### மூன்றும் நான்கும்

**சீ**ங் ராஜ்யத்தில் ஒருவன் ஏராளமான குரங்குகளைப் பிடித்து, வளர்த்தும் பழக்கியும் வந்தான். அவன் குரங்குகளின் மனக் கருத்தைப் புரிந்து கொள்வான்; குரங்குகளும் அவன் மனக் கருத்தைப் புரிந்து கொள்ளும். அவன் தன் குடும்பத்தார் உண்ணும் உணவில் ஒரு பகுதியை எடுத்துக் குரங்குகளுக்குப் போடுவான். ஆனால் ஒரு சமயம் கஷ்டநிலை ஏற்பட்டு, குடும்பத்தினர் சாப்பிடுவதற்கே ஆகாரம் இல்லாமல் போய் விட்டது. எனவே, குரங்குகளுக்குப் போடும் உணவைக் குறைக்கத் தீர்மானித்தான். குரங்குகள் அதற்குச் சம்மதிக்காதே, என்ன செய்வது என்று முதலில் திகைத்தான். கடைசியில் குரங்குகளை ஏமாற்ற முடிவு செய்தான்.



"உங்களுக்குத் தினமும் காலையில் மூன்று வேர்க்கடலைகளும் மாலையில் நான்கு வேர்க்கடலைகளும் போடுகிறேன். போதுமா ?" என்று குரங்குகளைப் பார்த்து அவன் கேட்டான்.

குரங்குகளுக்குக் கோபம் வந்து விட்டது. ஆத்திரத்தோடு அவன் மீது பாய்ந்தன.

"சரி, அப்படியானால் காலையில் நான்கு வேர்க்கடலைகளும் மாலையில் மூன்றும் போடுகிறேன். சம்மதம்தானே ?" என்று கேட்டான்.

குரங்குகள் திருப்தியடைந்து அமைதியாக உட்கார்ந்து விட்டன.

□ □ □ □ □ □ □ □ □ □ □

### யாரையும் பார்க்காதவன்

**சி** ராஜ்யத்தில் ஒருவன் ஒரு நாள் காலையில் நன்றாக உடுத்துக் கொண்டு கடைத் தெருவுக்குப் போனான். தங்கம் 'விற்கும் காசுக்கடையில் பலர் உட்கார்ந்திருக்கும் போது அவன் யாருக்கும் தெரியாமல் ஒரு தங்கக் கட்டியை எடுத்துக் கொண்டு நழுவி விட்டான்.

அவனை அதிகாரிகள் பிடித்துக் கொண்டார்கள். "அத்தனை பேர் உட்கார்ந்திருக்க,



நீ தங்கத்தைத் திருடினாய் அல்லவா?" என்று கேட்டார்கள் அதிகாரிகள்.

"எத்தனை பேர்கள் இருந்தார்கள்? நான் தங்கத்தை எடுக்கும் போது தங்கத்தைத் தான் பார்த்தேன். மனிதர்கள் யாரையுமே பார்க்கவில்லையே?" என்றான்.

□ □ □ □ □ □ □ □ □ □ □

### மலைகளைப் பெயர்த்தவன்

**தை**ஹாங், 'வாங்வூ என்ற பெயருடைய இரண்டு மலைகள் இருந்தன. அவை பல்லாயிரம் அடி உயரமும் பல மைல் சுற்றளவும் உள்ளவை. அந்த மலைகளுக்கு வடபக்கத்தில் தொண்ணூறு வயதுக் கிழவன் ஒருவன்வசித்து வந்தான். ஜனங்களெல்லாம் அவனை முட்டாள் என்று சொல்வார்கள். அவன் தெற்கே போக வேண்டும் என்றால் மலைகளைச் சுற்றிக் கொண்டே போகவேண்டியிருந்தது. அதனால் ஒரு நாள் தன் குடும்பத்தாருடன் உட்கார்ந்து ஆலோசனை செய்து, அந்த மலைகளைப் பெயர்த்துப் பூமியைச் சமதளமாக்கி விட வேண்டும் என்று முடிவு செய்தான்.

"மலைகளைப் பெயர்த்தெடுத்த கல்லையும், மண்ணையும் எங்கே கொண்டு போய்ப் போடுவது ?" என்று கேட்டாள் கிழவனின் மனைவி.

"கடலில் கொண்டுபோய்ப் போடுவோம்" என்றான் கிழவன்.

முட்டாள் கிழவனும், அவன் மகனும், பேரனும் அன்றே ஆளுக்கு ஒரு கடப்பாரையை எடுத்துக் கொண்டு போய் மலையை இடித்தார்கள். கல்லையும் மண்ணையும் பெயர்த்துக் கூடைகளில் போட்டுக் கொண்டு கடலை நோக்கி நடந்தார்கள். அவர்களுக்குப் பக்கத்து வீட்டில் வசிக்கும் ஒரு விதவையின் எட்டு வயதுப் பையனும் அந்த மூவருக்கும் உதவி செய்வதற்காக

அவர்களோடு கடலுக்குச் சென்றான். கடலோ வெகுதூரத்தில் இருந்தது. போய்த் திரும்பப் பல மாதங்கள் ஆகும்.

நால்வரும் நடந்து போகும் போது அவர்களைப் பார்த்து ஒருவன் சிரித்தான். அவன் அந்தப் பகுதியில் விவேகி என்று போற்றப் படுகிறவன்.

''கிழவா! என்ன முட்டாள்தனமான வேலை இது? நடக்கிற காரியமா? நீ குடுகுடு கிழவனாக இருக்கிறாய். உடம்பில் பலமே இல்லை. மலையின் ஒரு கோடியைக்கூட உன்னால் பெயர்க்க முடியுமா ? அப்படியே பெயர்த்தாலும் அவ்வளவு கல்லையும் மண்ணையும் அப்புறப்படுத்துவதுதான் எப்படி?'' என்று கேட்டான் விவேகி.



முட்டாள் கிழவனுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. அவன் விவேகியைப் பார்த்து, ''இந்த விதவையின் பிள்ளைக்கு இருக்கும் அறிவுகூட உனக்கு இல்லையே ! நான் செத்துப் போனாலும் எனக்குப் பிறகு என் மகன் இருப்பான். அவனுக்குப் பிறகு அவனுடைய மக்கள் இருப்பார்கள். இப்படியே தலைமுறை தலைமுறையாக இருந்து கொண்டிருப்பார்கள். சந்ததிகள் வளரும். ஆனால் இந்த மலைகள் வளராது. அப்படி இருக்கும் போது அவற்றை ஏன் பெயர்க்க முடியாது ?'' என்று கேட்டான்.

விவேகி வாயைத் திறக்கவில்லை.



## சந்தேகம்

ஒருவன் தன்னுடைய கோடாலியைத் தொலைத்து விட்டான். பக்கத்து வீட்டுக்காரனுடைய மகன்தான் அதைத் திருடியிருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. அன்று முதல் அவனைச் சந்தேகக் கண் கொண்டு பார்க்கத் தொடங்கினான். பக்கத்து வீட்டுக்காரனுடைய மகன் நடப்பது திருடன் நடப்பது போலவே இருந்தது. அவனுடைய முகத் தோற்றத்தைக் கவனித்தான்; அது அசல் திருடனுடைய முகத்



தோற்றம் போலவே இருந்தது. அவன் பேசுவதைக் கவனித்தான்; அசல் திருடன் பேசுவது போலவே இருந்தது.

சுருக்கமாகச் சொன்னால் அவனுடைய பேச்சும், ஜாடைகளும், நடவடிக்கைகளும் அவன் திருடன்தான் என்று ஊர்ஜிதம் செய்து கொண்டிருந்தன.

சில நாட்களுக்குப் பிறகு ஒரு சமயம் அவன் மண்ணைத் தோண்டும் போது அங்கே அந்தக் கோடாலி கிடப்பதைப் பார்த்தான். சந்தோஷத்தோடு அதை எடுத்து வைத்துக் கொண்டான். அன்று முதல் பக்கத்து வீட்டுக்காரனுடைய மகனின் நடையும், பேச்சும், ஜாடைகளும், நடவடிக்கைகளும் அவன் திருடனல்ல என்று ஊர்ஜிதம் செய்து கொண்டிருந்தன.



## புறக்களிடம் அன்பு

ஹாண்டன் ராஜ்ய மன்னனுக்குப் புது வருஷப் பிறப்பன்று அவனுடைய குடிமக்கள் புறாக்களைப் பிடித்துக் கொண்டு வந்து பரிசாகக் கொடுப்பது வழக்கம். இதைப்பார்த்த ஒருவர் அரசனை நோக்கி, ''குடி ஜனங்கள் ஏன் இப்படிப் புறாக்களைப் பிடித்துக் கொடுக்கிறார்கள்?'' என்று கேட்டார்.

''புறாக்களிடம் எனக்கு உள்ள அன்பைக் காட்டுவதற்காக அவற்றைப் புது வருஷப் பிறப்பன்று நான் விடுதலை செய்வது வழக்கம். அதற்காகத்தான் ஜனங்கள் புறாக்களைப் பிடித்துக் கொண்டு வந்து என்னிடம் கொடுக்கிறார்கள். நானும் அவற்றை இப்போது பறக்கவிடப் போகிறேன்'' என்றான் அரசன்.

அதற்கு அவர் சொன்னார்: ''உங்களுக்காக ஜனங்கள் புறாக்களை விரட்டி விரட்டிப் பிடிக்கிறார்கள். அதன் பலனாக அநேகம் புறாக்கள் சாகின்றன. உண்மையிலேயே அவற்றினிடம் உங்களுக்குப் பிரியம் இருக்கிறது என்றால், 'யாரும் புறாக்களைப் பிடிக்கக் கூடாது' என்று உத்தரவு போட வேண்டும். விடுதலை செய்வதற்காகப் புறாக்களைப் பிடிப்பானேன் ? நீங்கள் செய்யும் கொடுமையை உங்கள் அன்பைக் கொண்டு போக்கி விட முடியாது.''

அவர் கூறியதை அரசனும் உண்மை என்று ஒப்புக் கொண்டான்.

# பொருள்களை வைக்க கீரா காபினெட்டுகள்!

கீரா ஸ்டீல் காபினெட்டுகள் அழகான மெருகுள்ளவை...துருவினாலும் அரிப்பினாலும் பாதிக்கப்படாமலிருக்கும்படி 'ட்ரீட்' செய்த ஸ்டீலினால் தயாரிக்கப்பட்டவை. இவை நீண்டகாலம் நிலைக்கின்றன. பொருள்களை வைக்க இவை வசதியானவை, பத்திரமானவை. எல்லா காபினெட்டுகளுக்கும் பத்திரமாக பூட்டும் ஏற்பாடு உள்ளது. இவற்றின் ஷெல்ஃபுகளை வேண்டும்படி பொருத்திக்கொள்ளலாம்; பொருத்தமான 'ஃபிட்டிங்குகள்' கூட கிடைக்கும். வீட்டிலும் சரி, ஆஃபீஸிலும் சரி, உங்கள் பொருள்களை பத்திரமாக வைக்க கீரா காபினெட்டுகளே சிறந்தவை!



'யுடிலிடி': 1971 எம்.எம். x 910 எம்.எம். x 481 எம்.எம். (78"x36"x19")



'பாபுலர்': 1641 எம்.எம். x 831 எம்.எம். x 481 எம்.எம். (65"x33"x19")



'மிஜட்': 1270 எம்.எம். x 760 எம்.எம். x 481 எம்.எம். (50"x30"x19")

JWT-KSW-483J




கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிமிடெட்
ஸ்வாமி விவேகானந்தா ரோட், ஸாந்தா க்ரூஸ், பம்பாய்-54

மூன்றாவது
பரிசு நாவல்

# மணக் கோலம்



டி.வி.ஆர்

## அத்தியாயம் 25

"அப்படியானால் இப்போ ஏன் மாட்டேங்கறே?''

''ஆசை இருக்கு என்கிறதுக்காக ஆற்றிலே குதிக்கணுமா? நல்ல வரனாக வந்து, அவன் என்னை ஆசையாக வைத்துக் கொள்வானென்று தெரிஞ்சால் பண்ணிப்பேன்.''

''அப்படி ஒரு வரன் இப்போ என் உள்ளங்கையிலே இருக்குடி ஜானு!''

''யார் அவன்?''

''நடராஜன்...''

''யாரு, இன்னிக்குப் பார்த்தேனே, உன் செக்ஷனில். அவனா?''

''ஆமாம்... நல்ல பிள்ளை. கண்ணுக்கு லட்சணமா யிருக்கான்.''

''வெறும் குமாஸ்தா தானே அவன்? என்னைக் கல்யாணம் பண்ணிண்டா மூணு நாளிலே அவன் ஓடிப்போயிடுவான். நான்தான் ஏழை. என் புருஷனும் ஏழையாகவா வரணும்?''

''ஏழைக்கும் ஏழைக்கும்தானே பொருத்தம்...?''

''உன் சித்தாந்தம் ரொம்ப அழகு தான்! என் அழகுக்கு ஒரு பணக்கார வீட்டுப் பிள்ளையோ, அல்லது ஒரு பணக்காரனோ வருவான் என்கிற கர்வம் எனக்கு என்னிக்குமே உண்டு.''

''அப்போ...?''

''நீ என் கல்யாணத்துக்காக இது வரையில் எடுத்துக் கொண்ட சிரமம் போதும் அக்கா... என் கல்யாணத்தை என்கிட்டேயே விட்டுடு.''

''நீ இப்படிச் சொல்றேன்னு அம்மாவுக்குத் தெரிஞ்சா என்ன நினைப்பாள்?''

''அந்தப் பிரும்மாவுக்கே தெரிஞ்சாலும் எனக்குப் பயமில்லை. எனக்கு வாழறதுக்கு உரிமை இருக்குன்னு. அதை எப்படி வாழணும்னு தீர்மானிக்கிறதுக்கும் நான்தான் பொறுப்பாளி. நீயும் அம்மாவும் அலட்டிக்காமல் இருந்தால் சரி...''

சீதா அலுப்புடன் எழுந்தாள்.

''அக்கா, நீ வர வர மனப்பிராந்தி பிடிச்சவளைப் போல் இருக்கிறது வீட்டுக்கே ஒரு சூனியம் போல இருக்கு. இயற்கையாகவே உன்னிடம் கலகலப்பு இல்லைதான். ஆனால் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது ஊரையும் உலகத்தையும் பார்த்து, தலையைத் தூக்கி நட. பழசையெல்லாம் நினைக்கிறவன் என்னிக்குமே முன்னுக்கு வந்தது கிடையாது. நீ என்னைவிடப் பெரியவளானாலும் எனக்குப் புத்தி சொல்ல அருகதை இருக்குன்னு சொல்றேன். என்கிட்டே புதிசா வாங்கின ஜார்ஜட்டும், நைலக்ஸும் இருக்கு... இன்னும்கூட இரண்டு வாங்கித் தரேன். உன் மங்கிப் போன கோடம்பாக்கத்தையும், உறையூரையும் மூலையிலே தூக்கி எறி. கைக்கு அழகா இருக்கும், நான் வாங்கின கடிகாரம். அதைக் கட்டிக்கொள். உன் மனசுக்கு ஒரு ஜிலுஜிலுப்பு இருக்கும். எல்லாம் மனசைத்தான் பொறுத்திருக்கு நாம வாழற வாழ்க்கை.''

''எனக்கு நீ சொல்றபடியெல்லாம் இருக்க வராதடி...''

''இதையெல்லாம் கற்றுக் கொள்ள நீ எந்த பள்ளிக்கூடத்திலேயும் படிக்க வேண்டாம். இரண்டு நாள் நான் சொல்றமாதிரி இருந்து பார்...அப்புறம் பழசை நினைச்சுக்கூடப் பார்க்க மாட்டே. மாசத்துக்கு ஒரு நல்ல சினிமாவாகப் பாரு. நடுநடுவே கடற்கரை, நாடகம்னு போ...இப்போ நாம் வாழற உலகம் இங்கேயெல்லாம்தான் இருக்கு.. இங்கேயெல்லாம் போறதினாலே நாம ஒழுக்கம் கெட்டோ நடத்தை கெட்டோ போயிடறதில்லை.''

''நம்மை நாமே ஏமாத்திக்கொள்ள இவையெல்லாம் இருக்கு.''

''தப்பு... நம்மை நாமே மறந்து கொள்றதுக்கும் இருக்கு. உன் மாதிரி இந்த மெட்ராஸிலே உள்ளவா அத்தனை பேரும் இருந்தால் எப்படி இருக்கும்னு நெனைச்சுப் பாரு. உயிரில்லாதவர்களின் நடமாட்டம்தான் தெரியும்.''

ஜானு இவ்வளவு தூரம் பேசியும், சீதா கடைசி முறையாக, ''நடராஜன்...'' என்று இழுத்தாள்.

''அவனுக்குச் சமைச்சுப் போட்டு, டிரஸ்ஸை எடுத்துத் தயாராக வைக்கிற பெண்டாட்டி வேறு யாராவது ஒருத்தி வருவாள். நீ கவலைப்படாதே.''

சீதா தாயாராலும் தங்கையாலும் தலைதூக்க முடியாத அளவுக்கு முறியடிக்கப்பட்டு விட்டாள். இனி விதி வகுத்தபடி நடக்கட்டும் என்று அவள் மனம் நொந்து கொண்டது. அவளை அவள் அம்மாவும் புரிந்துகொள்ளவில்லை; ஜானுவும் புரிந்துகொள்ளவில்லை. ஜானு அழுத்தம் திருத்தமாகத் தன்



எண்ணத்தைக் கூறியதோடு நில்லாமல், சீதா எப்படி இருக்க வேண்டும் என்று உபதேசமும் செய்து விட்டாள்.

இனி சீதாவுக்கு என்ன? யார் எப்படிப் போனால் என்ன? செக்கு மாடுகள் போவது போல, அவள் இயந்திரமாக இயங்கிக் கொண்டே வருவாள். தடையில்லாத இயக்கம் அது ஒன்றுதான். உழைக்க வேண்டும், உண்ண வேண்டும், உறங்க வேண்டும். ஏற்கனவே ஒரு தனி உலகைத் தனக்கென்று சிருஷ்டி செய்து கொண்டு விட்ட அவள், இனிமேல் என்றென்றும் இந்த உலகினுள்ளேயே திரிந்து திரிந்து வாழ்நாளைக் கழிக்க வேண்டியதுதான். வாழ்க்கையின் உண்மையான இன்பம் என்ன என்பதை அறியாமலேயே சருகுகளாகப் போய்விடுகிற எத்தனையோ பேர்களில் அவளும் ஒருத்தியாகிவிட்டாள். அதைப் பற்றி மனம் புழுங்குவதில் அர்த்தம் இல்லை.

ஃ ஃ ஃ

**சா**மார் ஏழு மணிக்கு வந்த கமலா, கண்கலங்கி உட்கார்ந்திருக்கும் சீதாவைப் பார்த்ததும் திடுக்கிட்டாள்.

''அக்கா, அழுதுண்டிருக்கியா?''

''இல்லையே...'' சீதா புடைவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''பொய் சொல்லாதே. மூஞ்சி எல்லாம் சிவந்திருக்கு. யார் என்ன சொன்னார்கள்? ஜானு ஏதாவது கத்தினாளா?''

''இல்லையடி... நீ உன் காரியத்தைப் பாரு.''

''அம்மா ஏதாவது கோபமாகப் பேசினாளா?''

''நீ போயேன் கமலா!''

''நான் போறேன்... ஆனால் நீ ஏன் அழுதேன்னு சொல்லு... நடந்துபோனதெல்லாம் ஞாபகத்துக்கு வந்ததா? அதை நினைச்சபோது அழுகை...''

கமலா போவதற்கு முன், சீதாவே எழுந்து கூடத்திலிருந்து வாசலை நோக்கி நடந்தாள்.

கமலா, ''அம்மா!'' என்று கூவிக் கொண்டே சமையலறைப் பக்கம் ஓடினாள்.

வாசலில் அவள் வந்து நின்றபோது கற்பகம் எதிர் வீட்டுத் திண்ணையில் ஒரு குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தாள்.

''சீதா, வாயேன்!'' என்றாள் கற்பகம் தான் இருந்த இடத்தில் இருந்து கொண்டே.

மௌனமாய் நடந்த சீதா திண்ணையை அடைந்தபோது கை தானாகவே நீண்டது. அவளுடைய பரிச்சயமான முகத்தைப் பார்த்ததும் குழந்தையும் தாவிக் கொண்டு சென்றது.

''டேய் கண்ணு! உன் பெரியம்மாவை விட இந்தச் சீதாதான் ஓசத்தியாடா உனக்கு!'' என்று செல்லமாகக் குழந்தையின் கன்னத்தைக் கிள்ளினாள்.

கண்ணன் சீதாவின் கண்ணாடியை எடுக்க முயற்சி செய்ய, அவள் அவனுடைய மணி விரல்களை மெதுவாக எடுத்துத் தன் கன்னத்தில் பதிய வைத்தாள். பஞ்சு போன்ற பிஞ்சு விரல்கள், அவளுடைய கண்ணீர் உலர்ந்துவிட்ட கன்னங்களை வருடியபோது சீதா இந்த உலகத்

தையே மறந்தாள். அவளையும் அறியாமல் அவளுடைய கைகள் குழந்தையை இன்னும் இறுக அணைத்தன.

தானும் கற்பகத்தின் கோஷ்டியில் சேர்ந்து விட்டோம் என்ற தாபம் கூட அக்கணத்தில் அவளுள் தோன்றவில்லை.

ஏழெட்டு நாட்களுக்குப் பிறகு ஒருநாள்— ஒரு வெள்ளிக் கிழமை.

தீபச்சுடர் ஒளியில் கற்பகாம்பாள் ஜகஜ்ஜோதியாகத் திகழ்ந்தாள். பச்சைப் புடவையும் தங்க ஒட்டியாணமும் நவரத்ன மாலையுமாக அவள் புன்னகை பூத்து நின்றாள். மூக்குத்தியின் வைரம் கண்களைப் பறித்தது.

விஜயா

''அம்மா தாயே.... ஈசுவரி...லோக மாதா.... என் பெண்களுக்கு நல் வாழ்வு தா, அம்மா!''

தன்னைச் சுற்றி ஒரு பெருங்கூட்டம் இருப்பதையும் மறந்து நெகிழ்ந்தாள் பாகீரதி அம்மாள். கண்கள் கண்ணீரில் கனத்தன. அவளுடைய கண்ணிதழ்கள் மூடினதும் நீர் கன்னங்களில் வழிந்தது. தீப ஆராதனை முடிந்து விட்டதையும், பக்தகோடிகள் சிதறிக் கொண்டிருப்பதையும் பொருட்படுத்தாமல் அவள் அசையாமல் நின்றாள்.

''என்ன மாமி, போவோமா?''

மெதுவாகப் பாகீரதி கண்களைத் திறந்தாள். அலுமினியக் கிண்ணத்தில் ஒட்டிக் கொண்டிருந்த எண்ணெயை ஒரு விரலால் வழித்துத் தலையில் தடவியவளாய்ப் பார்வதி நின்று கொண்டிருந்தாள்.

''உம்....'' பாகீரதி நகர்ந்தாள்.

அம்மன் சந்நிதியை விட்டு வெளியே வந்ததும், பாகீரதியின் கண்கள், தாமாக ஈசுவரனை நாடின. இருந்த இடத்திலிருந்தே தரிசனம் செய்து விட்டு, ''பார்வதி, சனீச்வரரையும் நவக்கிரகங்களையும் முடிச்சுண்டு அப்படியே சந்நிதித் தெரு வழியாகப் போய் விடுவோமா ?'' என்று கேட்டாள்.

''செய்வோமே.....!''

கோவிலில் தரிசனத்தை முடித்து விட்டு இருவரும் வெளியே வந்ததும் பார்வதி கேட்டாள் : ''ஏன் மாமி, சீதாவுக்குப் புதுசா ஏதாவது வரன் நேர்ந்து கிடைச்சிருக்கா...?'' என்று.

''ஒன்றும் இல்லே.....''

''அந்த அலமேலுவின் வாய்ப்பந்தலிலே பறிகொடுத்த மாதிரி இன்னும் ஏமாந்து விடாதேங்கோ. என் பிள்ளை வேலை பார்க்கிற ஆபீஸிலே நிறையப் பேர் இருக்கா. ஏதாவது ஜாதகம் வாங்கித் தரேன், பார். பொண்ணுக்கு இன்னமும் நீட்டிப் போடப்படாது. இருபத்தேழா இருபத்தெட்டா ?''

''ரெண்டுக்கும் ரொம்ப வித்தியாசமில்லே. நல்ல வரனா இருந்தா சொல்லுங்கோ.....'' என்றாள் பாகீரதி.

''சொல்றேன். எனக்கென்னவோ நீ இப்படி அலைக்கழியறதைக் கண்டா வேதனையாயிருக்கு..... கற்பகாம்பாள்தான் கண் திறந்து பார்க்கணும். அவ கடைக்கண் பார்த்தால் பொல பொலன்னு உனக்கு விடிஞ்சுடுமே !''

''நானும் ஏங்காத ஏக்கம் இல்லே?''

''மூத்தவளுக்குச் சரசரன்னு முடிச்சாத்தானே, மத்த ரெண்டுக்கும் — பார்க்கலாம்.....!''

''ஆமாம்......''

''எப்படியாவது இரண்டு மூன்று மாசத்திலே சீதாவின் கலியாணத்தை நல்லபடியா நடத்தணும்....'' என்றாள் பார்வதி.

சீதாவின் அப்போதைய மன நிலையை அறிந்தும் பாகீரதி அதை வெளியில் சொல்லவில்லை. ஏதோ ஒரு வெறுப்பில் பெண் ஓர் அபத்தமான முடிவை மனத்தினுள் கற்பித்துக் கொண்டிருக்கிறாள். நல்ல வரனாக மட்டும் கிடைத்துவிட்டால், எல்லாருமாகச் சேர்ந்து சீதாவின் மனத்தை மாற்றி விடலாம். அதுவும் அம்மா சொல்லி சீதா கேட்காமல் இருந்ததில்லை !

கிழக்கு மாட வீதி வழியாக நடந்து இருவரும் சித்திரக் குளத்தை அடைந்தார்கள்.

''ஒரு நாள் மத்தியானமா வாருங்களேன் !'' என்றாள் பாகீரதி, பார்வதி புதுத் தெருவை நோக்கிப் புறப்பட ஆயத்தமானதும்.

''வரேன்..... ஒரு நாள் வரேன்..... ஒழியவே மாட்டேன் என்கிறது..... அப்போ நான் வரட்டுமா?''

''சரி......''

பாகீரதி தெற்கு மாட வீதி வழியாக அரிசிக்காரன் தெருவை நோக்கி நடந்தாள். தெரிந்தவர், தெரியாதவர்களுக்கெல்லாம், பதில் சொல்லும்படியான நிலைமை, கேவலமான நிலைமை தனக்கு ஏற்பட்டு விட்டதே என்று அவளுடைய நெஞ்சம் கதறியது. கல்யாணத்துக்கு ஒரு பெண் இருந்தாலே வயிற்றை அள்ளித் தின்னும் பயமும், கவலையும் உண்டாகும்! மூன்று பெண்கள் ஒன்றன்பின் ஒன்றாய் இருக்கிறார்களே! இவர்களுக்கு என்ன வழியை ஈசுவரன் வைத்திருக்கிறான் ? இந்த மூன்று பெண்களையும் வயிறு திறந்து பெற்ற அவள் எப்படி அவரவர்களுடைய இடங்களுக்கு அனுப்பப் போகிறாள் ?

பாகீரதி இயந்திரமாக நடந்தாள். ஃபண்டாபீஸ் கடிகாரத்தில் ஏழரை மணி ஆகியிருந்தது. அவள் அதைத் தாண்டியதும் இடதுபுறமாகத் திரும்பிச் சென்றாள்.

அவள் இருக்கும் தெருவை அடைந்த போது, தன் வீட்டின் முன் பிரும்மாண்டமான கார் ஒன்று நிற்பதைக் கண்டாள். அவளையறியாமல் திகிலும் பயமும் உண்டாயின. ஆனால் அடுத்த கணமே, 'சந்தானத்தைத் தேடிக் கொண்டு யாராவது வந்திருக்கக் கூடும், அல்லது ஜானுவின் எத்தனையோ பணக்கார சிநேகிதிகளில்

# இலவசம்




**ஒவ்வொரு சிந்தால் சோப்புடனும் ஒரு கூப்பன்:**

**அக் கூப்பனைக் கொடுத்து சிந்தால் டாய்லெட் பவுடர் வாங்கினீர்களானால் உங்களுக்கு**

# 35 பைசா மிச்சம்

வாடை அகற்றும் மேனியழகு சோப்பாகிய ஒவ்வொரு சிந்தால் சோப்பின் மேலுறையினுள்ளும் ஒரு விசேஷ கூப்பன் உள்ளது. அதைக் கொடுத்து சிந்தால் டாய்லெட் பவுடர் (லார்ஜ், பேமிலி, அல்லது எகானமி சைஸ்) எந்த ஒரு டப்பா வாங்கினாலும் உங்களுக்கு 35 பைசா மிச்சமாகும்.







"வேறெந்த பாக்கையும் விட அதிக டாய்லெட் பவுடர் அடங்கியது"

மணங்கமழும் மென்மையான சிந்தால் சோப், டாய்லெட் பவுடர் இரண்டிலும் அடங்கியுள்ள ஜி11 (ஹெக்ஸாக்ளோ-ரோபீன்) வேர்க்குருவையும் சாதாரண சருமக் கோளாறுகளையும் வராமல்தடுத்து, உடம்பில் நாற்றம் எழாமல் பாதுகாக்கிறது.

உங்கள் புதுமலர்ச்சிக்கு இருமடங்கு உறுதிபெறுங்கள்—அதோடு 35 பைசா மிச்சமாக்கும் வகையிலே வாங்கி உபயோகியுங்கள் சிந்தால் சோப் மற்றும் டாய்லெட் பவுடர்.

INTERPUB/CC & TM



''சும்மா நிறுத்தண்ணே! எகிறாதே!. பெர்சா மீசையைப் போட்டுண்டு பய முறுத்தப் பார்க்கறியா ? கரப்பாம் பூச்சி, பாச்சைக்குக்கூடத்தான் மீசை யிருக்கு....!''

ஒரு சிநேகிதி வந்திருக்கலாம்' என்று தன் மனத்தைத் தேற்றித் திடப்படுத்திக் கொண்டாள்.

வீட்டை நெருங்கும் போதே வாசலில் கமலா அவளுடைய வருகைக்காகக் காத்துக் கொண்டிருப்பது தெரிந்தது. பாகீரதி வாசற்படியில் கால் வைக்கு முன்பேயே கமலா, ''சீக்கிரம் வா அம்மா.... யாரோ ஒரு பெரிய பணக்காரர் அஞ்சு நிமிஷமா கூடத்திலே உட்கார்ந்திருக்கிறார்....''— என்றாள்.

''சீதா இல்லியா....'' சொல்லிக் கொண்டே பாகீரதி அவசர அவசரமாகத் திண்ணையில் ஏறி, ரேழியை நோக்கி விரைந்தாள்.

''பத்து நிமிஷத்துக்கு முன்னாலே தான் அவள் போனாள். ஜானு இன்னும் வரவில்லை...'' என்று மூச்சுவிடாமல் சொல்லியவாறே கமலா அம்மாவுக்குப் பின்னால் நடந்தாள்.

பாகீரதி கூடத்தை அடைந்ததும், அங்கே முற்றத்துக்குச் சற்று அப்பால் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தவர் எழுந்து கைகூப்பினார்.

பதில் மரியாதையை எப்படித் தெரிவிப்பது என்று பாகீரதி தவிக்கையில்,

''ஸார்...! எங்க மதர்....'' என்றாள் கமலா. பிறகு, ''என்னுடைய இரண்டு அக்காமார்களும் வெளியே போயிருக்கிறார்கள்.....'' என்றாள்.

''உட்காருங்கள்...'' என்ற பாகீரதி அம்மாளுக்கு மேலே என்ன பேசுவது என்று புரியவில்லை.

அவளுடைய தவிப்பை உணர்ந்து கொண்டவரைப் போல அவர், ''இந்தாம்மா, உன் பெயர் என்ன சொன்னே கமலாவா.... நீ ஒரு அஞ்சு நிமிஷத்துக்குச் சமையலறையில் இருக்கியா?'' என்றார்.

ஏதோ ஒருவிதப் பயம் பாகீரதியைக் கவ்விக் கொண்டாலும், வந்திருக்கிறவர் ஒரு முக்கியமான காரணத்துக்காகத்தான் வந்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டவளாய், அந்த எண்ணமே ஒருவாறு பயத்தை நீக்கிவிட, ''கமலா, ஸ்டவ்வை ஏத்தி, அப்பளாத்தைப் பொரிச்சு வை!'' என்றாள்.

கமலா சென்றதும் அவர், ''உங்களை நான் இப்போதுதான் முதன் முதலாப் பார்க்கிறேன்..... என்னை நீங்கள் பார்த்திருக்கிறீர்களோ இல்லையோ, என் பெயர் தெரிந்திருக்கும்'' என்று ஆரம்பித்தார்.

''நான் பார்த்ததில்லை....'' அதே கணத்தில் உள் மனம் வந்திருக்கிறவர் ஒருவேளை கோதண்டராமனாக இருக்குமோ என்று கேட்டுக் கொண்டது.

அடுத்த விநாடியே அவர், ''என் பெயர் கோதண்டராமன்'' என்றார்.

''நினைந்தேன்'' என்று சொல்ல நா வந்தது. ஆனால் பாகீரதி சமயத்தில் இழுத்துக் கொண்டாள்.

''நீங்கள் எப்படி இருக்கிறீர்கள் என்று நான் பத்து வருஷத்துக்கு அப்புறம் தெரிந்து கொள்ள வருவது, அதுவும் உள்ளூரிலேயே இருந்து கொண்டு இத்தனை காலம் இல்லாமல் இப்போ வருவது உங்களுக்குப் புதிராகக்கூட இருக்கும்......''

''...... ..............''

''ஆனா மனுஷன் தன்னைத் தானே தெரிஞ்சுக்கிறதுக்குக் கால நிர்ணயம் இல்லை. கொஞ்சம் பேர் சில நாட்களிலேயே தெரிந்து கொண்டு விடுகிறார்கள். எனக்கு, என்னுடைய வண்டி எக்ஸ்பிரஸ் வேகத்திலே ஓடினப்போ, என்னைப் பத்தி நினைக்கவே நேரமில்லாமல் இருந்தது. அந்தச் சமயத்திலே பிறத்தியாரைப் பற்றிச் சிந்திக்கநேரம் ஏது.... நேரம்தான் இல்லை என்றாலும், இரக்கமாவது இருந்திருக்கலாம். ஆனால் ஒரு வேளை, இரக்கம் இருந்திருந்தா

நேரமும் அமைஞ்சு இருக்குமோ, என்னமோ ?''

வந்தவர் சொன்னது ஒன்றும் பாரதிக்குப் புரியவில்லே. வந்திருக்கிற வர் ஒரு காலத்தில் அவளுடைய கணவரை அந்தரங்கக் காரியதரிசியாக வைத்துக் கொண்டிருந்தவர், அவர் ஏன் எதற்காக, கோடை மழைபோல் 'திடு திப்'பென்று வந்திருக்கிறார்... வேதாந்த பாணியில் பேசுகிறார் என்பது விளங்கவில்லே.

அவளுடைய சஞ்சலத்தை அறிந்து விட்டவர் போல, கோதண்டராமன், குறுகியதொரு மௌனத்துக்குப் பிறகு ''என்னிடம் எத்தனேயோ பேர் வேலே பார்த்திருக்கிறார்கள். ரொம்பப் பேர் என்னே ஏமாற்றியும் இருக்கிறார்கள். ஒரு வேளே, நான் வியாபாரத்தைக் கண்ணியமாகவும் நேர்மையாகவும் நடத்தாமல் இருந்ததுதான் அதற்குக் காரணமாயிருக்கலாம். ஆனால் என்னுடைய வியாபார ரகசியங்களேயெல்லாம் தெரிஞ்சிருந்தும் அதையெல்லாம் தம் லாபத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்ளாமல் சத்தியம் தவறாமல் இருந்தவர் ஒருவர்தான்.... அவர் யார் என்று இப்போ உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லே.....''

எப்போதோ மண்ணோடு மண்ணாகி விட்ட தன் கணவருக்குக் கோதண்டராமன் இப்போது புகழ் மாலே போடுவது அசம்பாவிதமாகப் பட்டாலும், தன் கணவரை நினேத்தபோது பாரதியின் நெஞ்சு கனத்தது.

''அந்தச் சாம்பமூர்த்தியை நான்தான் வடநாட்டுக்கு அனுப்பினேன்.... பெண்ணின் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது என்றார். சீக்கிரம் திரும்பி விடலாம், வேண்டிய உதவியைச் செய்கிறேன் என்று ஆசை காட்டி அனுப்பினேன். என்னுடைய சுயநலத்தில் அவருடைய கஷ்டங்கள் என் கண்ணுக்குத் தெரியவில்லே.....''

இப்போது அவருடைய குரல் தழுதழுத்தது.

''போனவர் போனவர்தான்.... திரும்பி வரவேயில்லே.....'' என்றாள் பாரதி. அவளுக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது.

''இப்போ நான் சொல்லப் போகிறதைக் கேட்டால், எனக்கு உங்களுடைய மன்னிப்புக் கிடைக்குமோ கிடைக்காதோ.... ஆனாலும் என் மனசாட்சி நான் செய்திருக்கிற பாபங்களே ஒவ்வொன்றாக என் மனக் கண்ணுக்கு முன்னே உதறிப் போடறது. ராத்திரியிலே நானே என் கழுத்தை நெரித்துக் கொள்ள ஒரு வெறி உண்டாகிறது. உங்கள் அகத்துக்காரர் திரும்பி வராமல் போனதுக்கு நான்தான் காரணம்....''

அடுத்த விநாடியே பாரதி சிலேயானாள். மூன்று நாள் ஜுரத்தில் இறந்து விட்டதாக அல்லவா செய்தி வந்திருந்தது ?

அவளுடைய திகைப்பு அடங்கவும், பயம் தெளியவும் அவர் காத்திருப்பது போல் நீண்ட நேரம் மௌனம் சாதித்தார்.

''அவரை வடநாட்டுக்கு நான் அனுப்பியிருந்ததே கள்ளத்தனமான ஒரு வியாபாரத்தை முன்னிட்டுத்தான். இரண்டு லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள சரக்கு ஒருவரிடம் இருந்தது. ஒரு குறிப்பிட்ட ஓட்டலில்தான் இறங்க வேண்டும், ஒரு குறிப்பிட்ட அறையில்தான் தங்க வேண்டும் என்று நான் உத்தரவு போட்டிருந்தேன். சரக்கு அவர் கைக்கு வந்ததும் அவர் எனக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டுவிட்டு, வேறு ஒரு ஓட்டலுக்குப் போய் விட்டார். ஆனால் சரக்கை எனக்காக விற்றவன் சந்தேகப்பட்டு விட்டான்.... அதன் முடிவு.......''

கோதண்டராமன் நிறுத்தினார். முகத்தில் விவரிக்க இயலாத ஒரு வேதனே படர்ந்திருந்தாலும், கண்களிலிருந்து நீர் பெருகவில்லே.

ஆனால் பாரதியின் வற்றிப்போயிருந்த கண்ணீர் பீறிட்டு எழுந்தது.

''நான் தெய்வசாட்சியாக அவருடைய முடிவுக்கு உடந்தையாக இருக்கவில்லே. ஆனால் அவருடைய விதிக்கு நான் ஒரு கருவியாக இருந்திருக்கிறேன்...... அதற்கு நீங்கள் என்னே மனசார மன்னிக்க வேண்டும்.''

கோதண்டராமன் கைகூப்பிக் குனிந்தார்.

பாரதியின் உடல் தானாக நகர்ந்தது.

''இந்தச் சமாசாரம், இந்த ரகசியம் இப்போது எனக்கும் உங்களுக்கும்தான் தெரியும். உங்கள் பெண்களிடம் சொல்லக் கூடாது என்று உத்தரவு போட எனக்கு யாதொரு உரிமையும் இல்லே என்றாலும், அவர்களுக்குத் தெரிய வேண்டாம் என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்.....''

பாரதி வாயைத் திறக்கவில்லே. ஏதோ கண் காணுத ஓர் ஊரிலே, ஓர் ஓட்டல் அறையிலே அவளுடைய கணவனின் உடல் கேட்பாரற்றுக் கிடந்த கோலம் அவளுடைய மனக் கண்ணில் தோன்றி, அவளே நிலேதடுமாறச் செய்தது. (தொடரும்)

# உங்கள் குழந்தையின் அழுகையை நிறுத்தி, சிரிக்கச் செய்ய,



## மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கொடுங்கள்.

அனுபவமிக்க அன்னையர் குழந்தையின் முதல் வயதில் ஏற்படும் சாதாரண உடற் கோளாறுகளைச் சரி செய்ய மானேர்ஸ் க்ரைப் மிக்ஸ்சரையே நம்புகின்றனர். ஒரு டீ ஸ்பூனளவு மானேர்ஸ் க்ரைப் மிக்ஸ்சர் ஒழுங்கான இடைவேளைகளுக்கிடையே தரப்படுவதால் குழந்தையின் மென்மையான ஜீரண சக்தி சீரான நிலையில் இருக்க முடிகிறது



- வயிற்று உப்புசத்தையும் காற்றையும் அகற்றுகிறது.
- அஜீரணத்தை—குறிப்பாக பல் முளைக்கும் பருவத்தில்—தடுக்கிறது.
- குடல் வலியையும், வயிற்று வலியையும் குணப்படுத்துகிறது.
- ஜீரணேந்திரியங்களைச் சமனப்படுத்தி, நித்திரையை அளிக்கிறது.



Geoffrey Manners & Company Limited

ASP/GM-25 TAM

# பால்முனி: திரை உலக முனிவர்

"'விஷயங்களில் எவன் தானே ஈடுபட்டு விடாமல் விலகி நின்று பார்க்கிறானோ அவனே முனிவன்' என்பது உபநிஷதம்.

திரை உலகின் தொடக்க காலத்திலிருந்து பிரபல நட்சத்திரமாக ஜொலித்த பால்முனியின் ஒரு வாக்கியத்தைப் பார்ப்போம்: "வெற்றி என்பது எனக்கு மகிழ்ச்சியைத் தந்திருக்க வேண்டும். ஆனால் உண்மை அது வல்ல. ஏன் என்று எனக்குத் தெரியவில்லை. ஒருவேளை நான் ஒரு நட்சத்திரமாக இருக்க வேண்டும் என்று ஆதியில் விரும்பாததே காரணமாயிருக்கலாம். ஒருவேளை நான் நட்சத்திரமாகவே ஆகாமலிருந்தால் நன்றாயிருந்திருக்கும். ஒரு திரைப் படத்தில் நடிப்பதை விட அதைப் பார்ப்பதிலேயே நான் அதிக மகிழ்ச்சி காண்கிறேன்."

நடிப்பதைவிடப் பார்ப்பதிலேயே மகிழ்பவரை, விஷயத்தில் தானே ஈடுபடாமல் விலகியிருந்து பார்க்கும் முனிவருக்குச் சமானமாகச் சொல்லலாம்தானே?

பிறப்பால் ஆஸ்ட்ரியாவைச் சேர்ந்தவர் பால்முனி. அவர் வயலின் வித்வான் ஆவதற்கே முதலில் பயிற்சி பெற்றார். ஆனால் ஏதோ சந்தர்ப்ப வசத்தால் அவர் நாடக மேடையில் தோன்ற வேண்டியதாயிற்று. பதின்மூன்று வயதில் தாடி வைத்த கிழவராக முதலில் வேஷம் போட்டார் முனி. அந்தத் துறையே அவரை இழுத்துக் கொண்டு விட்டது.

எழுபத்தோரு வயதில் சமீபத்தில் காலமான பால்முனி பகட்டு, சொந்தப் பெருமை இவைபற்றி நினைத்தவரல்ல. நடிகனாகிய தான் என்று தனியாக ஒன்று இருப்பதாக அவர் என்றுமே காட்டிக் கொள்ள விரும்பாமல் பாத்திரம் என்ற ஒன்றிலேயே கரைந்துவிட முயன்றவர்; அதில் வெற்றியும் கண்டவர். அவரது வாக்குப்படியே ஒரு பாத்திரத்தை ஏற்கு முன்னதாக அந்தப் பாத்திரத்துக்கு "உள்ளே புகுந்துவிட"ப் பாடுபட்டவர் அவர். லூயி பாஸ்ச்சராக நடித்து அவர் ஆஸ்கார் பரிசு பெற்றதை உலகறியும். ஆனால் இப்பாத்திரம் தாங்கு முன் அவர் ஒரு ஆதரிச மருத்துவ நிபுணரின் நடை, உடை, பாவனை முதலியவைகளை முற்றும் பெறுவதற்காக எவ்வளவு நீண்ட அவகாசம் எடுத்துக் கொண்டார் என்பது உலகுக்குத் தெரியாது. ஒரு வைத்தியராகவே அவரைச் சர்வ கலாசாலையும் ஒப்புமளவுக்கு வைத்திய நூல்களை அவர் படித்தார்.

'குட் எர்த்' படத்தில் சீனர் வேஷம் போடுவதற்காக அவர் ஸான்ஃப்ரான்ஸிஸ்கோவிலுள்ள சீனப் பகுதியில் முழுதாக ஒரு மாதம் வசித்து அவர்களில் ஒருவரானார்.

'ப்ளாக் ஃப்யூரி'யில் சுரங்க ஊழியராக நடிப்பதற்காக பல வாரங்கள் உண்மையிலேயே ஒரு சுரங்கத்தில் கடின வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்தவர் அவர்.

'கௌன்ஸிலர் — அட் — லா' படத்தை முன்னிட்டுச் சட்ட நூல்களைக் கரைத்துக் குடித்து முடித்தார்.

பரமஹம்ஸ ராமகிருஷ்ணர் எல்லா மதங்களின் மெய்ப்பாட்டையும் உணருவதற்காக அந்தந்த மதஸ்தராகவே வாழ்ந்ததை இது நினைப்பூட்டுகிறது. அவர் மெய்ப் பொருள் நாட்டத்தில் உலகையே நாடகமாகக் கருதியவர். இவரோ நாடகத்திலேயே வாழ்வின் மெய்ப்பொருளைத் தேடியவர்.



மிகவும் சங்கோசியான பால்முனி புகழைக் கண்டு ஒதுங்கினார். யாருடனும் இலேசில் பழகாமல் தனித்திருந்தார் அவர். அவரைக் கையெழுத்து வேட்டைக்காரர்கள் முற்றுகையிடும்போது, "இதைவிடச் சிலாக்கியமான காரியம் வேறெதுவுமே உங்களுக்கு இல்லையா?" என்பாராம்.

பணம் என்பதை அவர் ஒரு பொருட்டாகவே நினைத்தது கிடையாது. "லட்சக் கணக்கில் பணம் திரட்டுவதற்காக நான் உழைக்க விரும்பவில்லை. ஆயிரம் ரூபாயில் என்னால் திருப்தியுடன் வாழ முடியும்" என்று கூறிய அதிசய நடிகர் அவர்.

இந்தத் திருப்தி காரணமாகத்தான் அவர் நெடுங்காலம் திரை உலகை விட்டு விலகி இருந்தார். பல்லாண்டுகளுக்குப் பின் பால்முனி மீண்டும் வெள்ளித் திரையில் தோன்றிச் சேரி வாழ் மக்களுக்குச் சேவை செய்யும் டாக்டராக 'லாஸ்ட் ஆங்க்ரி மானி'ல் தோன்றி ரசிகர்களைக் குதூகலிக்கச் செய்தார். பால்முனிக்கு அப்போது பத்திரிகைகள் அளித்த வரவேற்பு, ஒரு நாடு கடத்தப்பட்ட மன்னன் மீண்டும் ராஜ்யத்துக்கு முடிசூட வந்ததைக் கொண்டாடுவது போலிருந்தது.

லூயி பாஸ்ச்சர், எமைல் ஜோலா முதலிய மகாபுருஷர்களின் பாத்திரங்களைத் தாங்கிய பால்முனி தமது துறையில் அவர்களுக்குச் சமதையாக உயர்ந்தவர். திரை உலகின் துருவ நட்சத்திரமாக அவரது நடிப்பு என்றும் வழிகாட்டி வரும்.

# பட்டதாரிக்கு வரவேற்பு!

**பாத்திரங்கள் :** வக்கீல் பட்டாபிநாராயணன் சங்கர், ராமபத்ரன், பால விநாயகம், ரகுராமன், சம்பத், அபீதருசாம்பாள், மஞ்சுளா ஆகியோர்.

[வக்கீல் பட்டாபி நாராயணனின் இல்லம். சோபா செட்டும், பின்னல் நாற்காலிகளும் பூக்கிண்ணங்களும் புத்தக அலமாரிகளுமாகப் படாடோபமாக அமைந்த ஹால்.

காட்சி தொடங்கும் நேரத்தில் டெலிபோன் மணி ஒலித்துக்கிறது. அரங்கத்தில் ஒருவரும் இல்லை. ஹாலின் சமையல் அறை வழியாகக் கையில் பெரிய பால் கரண்டியுடன் அபீதருசாம்பாள் வேகமாக வருகிறாள்.]

அபீதருசாம்பாள் (வந்து கொண்டே) : அடடா... எத்தனை நாழியா டெலிபோன் மணி அடிச்சுண்டிருக்கு... வக்கீல் சார் எங்க தான் போயிட்டாரோ தெரியலயே (ரிஸீவரை எடுத்து) ஹலோ... யெஸ்... வக்கீல் பட்டாபி (சடக்கென்று நாக்கைக்கடித்துக்கொண்டு) வக்கீல் வீடுதான். நான் மிஸஸ் வக்கீல்! யார் வேணும்? அபீதருசாம்பாள் தான் பேசறேன்... ஆரு... (திகைப்புடன்) அபீதாவா (தனக்குள்) அடியம்மா... ஆரோ 'அபீதா'ன்னு கூப்படறாளே.. (டெலிபோனில்) ஹலோ.... எங்கேருந்து பேசறேள்?

வக்கீல் பட்டாபி நாராயணன் (வந்துகொண்டே): சமையல் உள்ளிலிருந்து...!

அபீதா: ஒங்களைக் கேக்கலே. நான் இந்தண்டை வந்ததும் முந்திரிப் பருப்பைத் இன்னு தீர்க்கப் போயிருப்பேள்னு நேக்கு நன்றாத் தெரியுமே...

வக்கீல் (பேச்சை மாற்ற எண்ணி): டெலிபோன்லே யாரு?

அபீதா (டெலிபோனில்): ஹலோ யாரு... அம்பியா? டேய்...டேய்... என்னடா அம்பி ஒங்கப்பா கூப்பிடறாப்பலே 'அபீதா'ன்னு கூப்பிட்டு விளையாடறே? நான் பதறிப் போய்ட்டேன்... எங்கேருந்துடா பேசறே? கான்வொகேஷன் ஆயிடுத்தா?

வக்கீல் (குறுக்கிட்டு): கர்மம்! கான்வோகேஷன் இல்லே... கான்வகேஷன்னு சொல்லு....

அபீதா: அதான் அதான்... நேக்குத் தெரியாதா? பெரிஸ்ஸா சொல்ல வந்துட்டேள். (டெலிபோனில்) அம்பீ, பட்டம் வாங்கிட்டயோன்னோ... என்னது... வாங்கியாச்சுத்தா? வாங்கிட்டேன்னு சொல்லுடா.... அப்பத்தான் படிக்க வச்சவா மனசு குளிரும். அம்பீ, ஆத்துக்கு வந்துட்டு அப்புறமா போய்ப் போட்டோ எடுத்துக்கலாம். நானும் வரேன்.

வக்கீல்: நீயும் என்னத்துக்கு? பட்டம் வாங்கினது அவன்தான்.



அபிதா: இருக்கட்டுமே. குரூப் போட்டோவா எடுத்துண்டாப்போறது...

வக்கீல்: எக்ஸ்ரே எடுக்கப் போறதும் குரூப்பாதான் எடுக்கணும்னு அடம் பண்ணுவே. நம்ம ஃபேமிலியைக் குரூப்பா நிக்க வச்சு எக்ஸ்-ரே எடுத்தா... எப்படியிருக்கும் தெரியுமா?.... அடாடா...

அபிதா: நிறுத்துங்கோ ஒங்க அசட்டுக் கல்பனையை... (டெலிபோனில்) அம்பி... ஸ்பெஷலா விருந்து தயார் பண்ணி வச்சுண்டு காத்திண்டிருக்கேன்.... என்னது? ப்ரெண்ட்ஸோட வரயா? வாயேன்... ஒன் ஃப்ரெண்ட்ஸுக்கு இல்லாத விருந்தா? பத்தரை மணிக்கு வரப்போறேடா? இன்னும் சித்த நாழிலே வந்துடுவயா? (கணவரிடம்) இந்தாங்கோ. முனியம்மாவை அனுப்பிச்சு வாழை இலை வாங்கிண்டுவரச் சொல்லுங்கோ.

வக்கீல் (உரத்து): ஏ. முனியம்மா!

அபிதா: ஏன் கத்தறேள்? அவ புறக்கடையிலே வேலையா யிருப்பா. நீரோ விருந்து காக எடுத்துக் குடுத்துட்டு...(வக்கில் போகிறார்) சாவி எங்கிட்டேன்னு இருக்கு இத்தெ வாங்காமே போறேளே... (வக்கில் திரும்பி வருகிறார்) வாண்டாம்... நானே வந்து குடுத்துக்கறேன்..

வக்கீல்: ஏண்டி...விஸ்பம் திரும்பறதா? சடுகுடு வெளையாடறே?...

அபிதா: (டெலிபோனில்): அம்பீ! சுருக்கா வந்து சேரு... கொள்ளை வேலை காத்துக் கெடக்கு... சுருக்கா வந்துடு...

வக்கீல்: சொன்னடா டெலிபோனை. அப்புறம் சுருக்கத்தைப் பத்தி ரெண்டு மணி நேரம் பேசுவே...

[ரிஸீவரை வக்கீல் கையில் கொடுத்து விட்டுப் போகிறாள்]

அம்பி... நான்தான்டா பேசறேன். கவலைப்படாதே. ஒங்கம்மா மூட் நன்னாத்தான் இருக்கு... நான் சமாளிச்சுக்கறேன்... நீ எங்கே முந்திரிக் கொட்டை மாதிரி உளறிடப் போறயோன்னு...

அபிதா (திரும்பி): என்னது...

வக்கீல்: ஒன்னுமில்லேடி.... முந்திரிப் பருப்பு பாக்கி வச்சிருக்காளான்னு விசாரிச்சான்.

அபிதா: கம்மா நிக்கறேளே சோபா செட்டெல்லாம் நகர்த்திப் போட்டு அரேஞ்ச் பண்ணப்படாதா? ஃப்ளவர் வாஸ்'ல புது புஷ்பங்களைச் செருகி வைக்கப்படாதா? இதெல்லாம் நானே சொல்லிண்டிருக்க முடியுமோ...?

வக்கீல்: (ரிஸீவரை வைத்து விட்டு) ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி பட்டாபிஷேகம்கூட இவ்வளவு தடபுடலாக நடந்திருக்காது. ஒம் பிள்ளை என்ன பட்டமா வாங்கிண்டு வரப்போறான்?

அபிதா (சட்டென்று திரும்பி): என்ன சொன்னேள்?

வக்கீல்: வரப்போறானே. பாத்துண்டே இருந்தேன்.

[அபிதா உள்ளே போகிறாள். வெளியிலிருந்து சார்.. சார்... என்ற குரல் கேட்கிறது]

வக்கீல்: யாரது?... வாங்கோ.. அடேடே ராமபத்ரன் எம், பி. பி.எஸ்ஸா? வாப்பா!

[ராமபத்ரன் வருகிறான்]

ராம: தாங்க்யூ ஸார்.... உங்க கோட்டை டிரை-வாஷ் பண்ணியே கொடுக்கலாம்னு நெனைச்சேன்...

வக்கீல்: டாக்டரோல்லியோ...? சுத்தமா இருக்கணும்னு நெனைக்கிறதிலே தப்பில்லே... இருக்கறயாங்கறதுதான்



எம்.எஸ்.பெருமாள்

பிரச்னே. கான்வகேஷன் அமர்க்களமா நடந்துடுத்தா?

ராம: எங்களுக்கு நேத்தே கான்வகேஷன். 'கிராஜுவேட்ஸ் ரிசப்ஷன்' கூட மெடிகல் காலேஜிலே முடிஞ்சு போச்சு.

வக்கீல்: அதுக்கும் என் கோட்டுத்தான் போட்டின்டிருந்திருப்பே... ஆல்ரைட்

[அவன் முணுமுணுத்தபடியே போகிறான். பால விநாயகம் என்ற பட்டதாரி வருகிறான். அபீதா உள்ளேயிருந்து வருகிறாள்]

பால: குட் மார்னிங் ஸார்... நமஸ்காரம் மாமி...

அபீதா (வெடுக்கென்று): ஏன், நேக்கும் குட்மார்னிங் சொல்லப்படாதோ... நானும் பதிலுக்கு இங்கிலீஷிலே சொல்ல மாட்டேனா... ஐ கேன் ஆல்ஸோ ஸ்பீக் இன் இங்கிலீஷ்... டோன்ட் யூ நோ தட்...?

வக்கீல்: விளாக... விளாக! புண்ணியத்துக்கு நமஸ்காரம் சொன்னா பதிலுக்கு பாஷையிலும் சொல்லச் சொல்லுவே..... இதென்ன கவர்ன்மெண்ட் ஆர்டரா பதிலுக்கு பாஷையிலும் சொல்ல...?

பால: ரொம்ப நன்றி சார்... (பொட்டலம் ஒன்றை நீட்டுகிறான்)

அபீதா: என்னது...?

வக்கீல்: ஒன்னுமில்லேடி.... அடுப்பிலே பாலே வச்சுட்டு வந்துட்டியே... உள்ளே போய்ப் பாரேன்...

அபீதா: பரவாயில்லே... பாலுக்குக் காவல் வெச்சுட்டுத்தான் வந்திருக்கேன்....

வக்கீல்: யாரு காவல்?

அபீதா: கடுவன் பூனே! .... ஆமா, அம்பி யாரு...

வக்கீல்: கடுவன் பூனே... ஓ! சாரி... நம்ப சுப்புரத்தினம் இருக்கானோல்லியோ அவனோட ஒய்ஃபோட ஒன் பிரதர்! இப்பதான் என்ஜினீயராளுன். கான்வகேஷனுக்குப் போயிட்டு வரான்.

[ரகசியமாக பாலுவிடமிருந்து பொட்டலத்தை வாங்கிவிட முயற்சி செய்கிறார்]

பால: மாமி... அடுப்பில... பாலு... அப்படின்னு...

அபீதா: என்னடாம்பி சொல்றே பாலு.. பாலம்னு....

வக்கீல்: அவன் என்ஜினீரோல்லியோ... மொத மொதல்லே பாலங் கட்டறபோது சித்தாள் தேவைப்பட்டா ஒனக்குச் சொல்லி அனுப்பறேங்கறுன். (கோபமாக) போயேன் உள்ளே!

[பாலுவிடமிருந்து பொட்டலத்தை வாங்கி சோபாவின்அடியில் மறைத்து வைக்கிறார்]

அபீதா (சிணுங்கலுடன்) ஏன்னு எம் பேர்ல கோவிச்சுக்கறேளா?

வக்கீல் (சமாதானமாக): ஹை....ஹை! கோபமில்லேடி....

அபீதா (வெடுக்கென்று): நீங்க கோவிச்சுண்டுதான் என்ன ஆயிடப் போறது? (பாலுவிடம்) அம்பீ, வித்யாசமா நெனைக்கப்படாது இன்னிக்கு நம்மாத்திலே விருந்து. பாயஸம் பண்ணிருக்கேன்.

பால: ஐயய்யோ... வாண்டாம் மாமி... இப்பத்தான் எங்க காலேஜிலே டின்னர் சாப்பிட்டுட்டு வந்தேன்.

அபீதா: இல்லேப்பா... பக்கத்துக் கடையில நாலணு ஏலம், முந்திரி வாங்கிண்டு வர முடியுமான்னு கேட்டேன். சௌகரியமில்லாட்டா வாண்டாம்பா.

வக்கீல்: அசடு. ஆத்துக்கு வந்தவாளே வேலே வாங்கறதா?

அபீதா: பின்னே நீங்கதான் போயிட்டு வாங்கோ.

[வக்கீல் பாலவிநாயகத்துடன் போகிறார்]

டீ முனியம்மா... கூடத்தை மொதல்லே பெருக்கிட்டு, அந்த டைனிங் டேபிளேயும் சுத்தம் பண்ணி வை. வர்ற பிரண்ட்ஸுக்கு மனே போட்டுண்டு சாப்பிடற பழக்கம் உண்டோ என்னவோ... யாரது வர்றது?

[ரகுராமன் என்னும் பட்டதாரி வருகிறான்]

ரகு: வக்கீல் சார் இல்லியா?

அபீதா: என்ன இன்னிக்கு வக்கீல்சாருக்கு ஏகப்பட்ட டிமாண்ட்?

ரகு: வக்கீல்சாரிடம் இந்தக் கோட்டைக் குடுத்துட்டுப் போகலாம்னு வந்தேன்.

அபீதா: அவர் வெளியே போயிருக்கார். என்னண்டை குடுங்கோ.

ரகு: நான் அவர்கிட்டேதானே வாங்கினேன். உங்களே எப்படி....

அபீதா: எப்படி நம்பறதுங்கறேளா....? கல்யாண போட்டோவைக் காட்டினுல்தான் நம்புவேன்போலிருக்கே! நன்னருக்குடாம்மா!

ரகு: பரவாயில்லே மாமீ! நீங்களே குடுத்துடுங்கோ.

அபீதா: கொண்டாங்கோ....! (பொட்டலத்தை வாங்கிப் பிரித்து) என்னது...அடடே கோட்டுன்னு....! எதுக்கு இது?

ரகு: கான்வகேஷன் ஹாலுக்கு நாங்க ஃபுல் ஸூட்டிலேதானே போகணும்...அதுக்காக அவர்கிட்டே....

அபீதா: கோட்டு வாங்கிண்டு போனேளாக்கும். சரி.... வந்தவொடனே குடுத்துடறேன்.

ரகு: நான் அவசரமா போகணும். இப்பவே குடுத்துட்டாத் தேவலே.

அபீதா: அவர் ஆத்திலே இல்லியே.... வந்தப்புறந்தானே கோட்டைத் திருப்பிக் குடுக்க முடியும்....?

ரகு: கோட்டு இல்லே மாமீ.... பாக்கி ரூபா.....

அபீதா: பாக்கி ரூபாயா....? புரியலியே!

ரகு: வாடகை போக டெபாசிட்டிலே பாக்கிப் பணம்.

அபீதா: கர்மம் கர்மம்.... கோட்டை வாடகைக்கா குடுத்தார்? எவ்வளவு ரூபா ஒரு கோட்டுக்கு?

ரகு: அஞ்சு ரூபா.... ஆளு இதுக்கு முன்னலே அவருக்கு என்னைத் தெரியாது. அதுனலே பத்து ரூபா டெபாஸிட் வாங்கிண்டார்.

அபீதா: ஸாயரா லட்சணமா இல்லே.... கர்மம்... இருங்கோ, பணம் எடுத்துண்டு வரேன்.

[போய்ப் பணம் எடுத்துக் கொண்டு வருகிறாள்]

இந்த ரூபா திருப்பிக் குடுத்தாச்சு. இதுக்கு ஏதாவும் ரசீது கிசீது உண்டா.....?



ZENITH
SPECIAL BLADES






ULKA-100-I TAM
தடவுங்கள்
அயோடெக்ஸ்—
தணியுங்கள்
வலியை




IODEX
IODEX

ரகு: இல்லே மாமி.... ஜெண்டில்மென்ஸ் அக்ரிமெண்ட்.

அபிதா: ஜெண்டில்மேனுத் தோணலியே!

[ரகுராமன் போகிறான். அபிதகுசாம்பாள் சோபாவில் உட்கார்ந்து நிதானமாக வெற்றிலே போட்டுக்கொண்டிருக்கிறாள்]

அபிதா: சித்தநாழியானாலும் இவரோட நிம்மதியா சண்டை போடலாம்னு இன்னிக்குப் பூரா நேரம் ஒழியமாட்டேங்கிறதே....

[வக்கீல் கையில் சிறு பொட்டலத்துடன் வருகிறார்]

அபிதா (பரிகுஷியாக): வந்துட்டேளா? வாங்கோ.... வாங்கோ.... (கொஞ்சலாக) ஏன்னு, நீங்க புதுசா கோட்டுக்கு ஆர்டர் குடுத்திருந்தேளாமே... என்னண்டை சொல்லலே இல்லியே....

வக்கீல்: என்ன உளர்றே...? நான் எங்கே ஆர்டர் குடுத்தேன்? என்னண்டைன்னு, எல்லா கிராஜுவேட்ஸும் ஆர்டர் குடுத்திருந்தா....

அபிதா: என்ன சொல்றேள்....? இப்போ தையற்காரப் பையன் கொண்டு வந்து குடுத்துட்டு அம்பது ரூபா கூலி வாங்கிண்டு போறானே.....!

வக்கீல்: சீ.... ஒன்னே எவனோ நன்னு ஏமாத்திட்டான். அசடு மாதிரி ஏமாந்துட்டு முழி முழின்னு முழிக்கறது.... அம்பது ரூபாயா குடுத்தே.....?

அபிதா: இத பாருங்கோ... இந்தப் புதுக் கோட்டு.

வக்கீல் (பிரித்துப் பார்த்து): பிரௌன் கோட்டு.... பிரௌன் கோட்டு. புதுக் கோட்டு.... புதுப் பையனுக்குன்னு குடுத்திருந்தேன்.... அபிதா அம்பது ரூபாயா அவனண்டை குடுத்தே......?

அபிதா : ஆமா....

வக்கீல் (பதற்றத்துடன்): அம்பது ரூபாயைத் தூக்கிக் குடுத்திட்டியே.... அவன் பத்து ரூபாதானேடி. டெபாசிட் குடுத்திருந்தான்......?

அபிதா: அப்பிடி வாங்கோ வழிக்கு. எத்தனை நாளா இந்தக் கோட்டு வியாபாரம் ?

வக்கீல் (செல்லமாக): சீ... அசடு....!

அபிதா (சீற்றத்துடன்): யாரைப் பார்த்து அசடுங்கிறேள்.....?

வக்கீல் பட்டமளிப்பு விழா சமயத்துலே கான்வகேஷன் கௌன் ஏழு ரூபாய்க்கும் பத்து ரூபாய்க்கும் வாடகைக்கு எடுக்கிறு, இல்லியா.....?

அபிதா: ஆமா...

வக்கீல்: ஆறு கோட்டு......?

அபிதா: சொந்தமாகவோ இரவலாகவோ வாங்கிப் போட்டுக்கறு.....

வக்கீல்: இரவல் என்ன ஜம்பம்...? கோட்டையும் வாடகைக்கு வாங்கட்டுமே! அதுக்குத்தான் நான் ஐடியா பண்ணினேன்.

அபிதா: ஒங்க ஐடியாவும் நீங்களும்.... (இடைசெருகு) ஆமா ஒங்களண்டை ஏது இத்தனை கோட்டு.....? ஒங்களுக்குன்னு உள்ளது ஒண்ணே ஒண்ணுதான். அதுவும் எங்க தோப்பனார் தெச்சுக் குடுத்தது.

வக்கீல்: ஒரு வாரமா நான் கோர்ட்டுக்குப் போனதை நீ பார்க்கலியே.... கார்த்தாலே

**கோயிலுக்குப் போறோமா?**



மனைவி: சாயங்காலம் ஆபீஸிலேருந்து நேரே வீட்டுக்கு வந்துடுங்க. கோயில்லே லட்சார்ச்சனை நடக்கிறதாம். நாமும் போயிட்டு வரலாம்.

கணவன்: சரிதான்! அதை நான் கோயிலுக்குப் போய்த்தான் கேட்கணுமா ?

- 'பாணன்'

---

போற போது கோட்டு இருக்காது. சாயந்திரம் திரும்பி வர்றபோது இருக்கும். எப்படி!

அபிதா: எப்படி? ஒங்க கட்சிக்காரா ளண்டை பீசுக்குப் பதிலா அவர் கோட்டையே பறிச்சுண்டு வந்துட்டேளா...?

வக்கீல்: டெய்லி 'பாரு'க்குப் போறதுக்கு முன்னாடி 'ஐயய்யோ, கோட்டை மறந்துட்டு வந்துட்டேனே'ன்னு மத்த லாயர்ஸ்கிட்டே கூசாம போய் சொல்லுவேன். இப்படி ஒரு வாரமா ஒவ்வொரு பிரண்டு கிட்டயா கேட்டுச் சேத்து வைச்சிருந்து கான்வகேஷனுக்கு முதல் நாள் ஏழு பசங்களுக்கு வாடகைக்குக் குடுத்திட்டேன். அஞ்சு ரூபா, பத்து ரூபா அப்படின்னு கோட்டுக்குத் தகுந்த வாடகை. நாலு திரும்பி வந்துடுத்து. மீதி மூணும் வந்துடும். அபிதா.... ஏன் பேச மாட்டேங்கிறே?.... இப்படியெல்லாம் வருமானம் வர்றதேன்னு கோபமா?

அபிதா: இல்லேல்லே... இப்படிக்கூட வராட்டா அப்புறம் ஏது வருமானம்னு யோசிச்சேன்.

[சோபாவிலிருந்து கோட்டினை வாரிக்கொண்டு வக்கீல் அறைக்குள் செல்கிறார். வெளியிலிருந்து 'சம்பத்' என்ற பட்டதாரி வருகிறான்]

சம்பத்: மாமா.... மாமா....

அபிதா (வந்து கொண்டே): அடேடே.... சம்பத்து சௌக்யமா? கையிலே என்னது? கோட்டா.... உங்க மாமா குடுத்தாரா ?

சம்பத் (கோட்டைக் கொடுத்து விட்டு): ஆமா... இந்தாங்கோ பத்து ரூபா.

அபிதா: ஏண்டா, சம்பத்து! நீயோ எங்களுக்கு மருமான் ஒறவாகணும். ஒன்னண்டையுமா பணம் வாங்கினார்? அப்படியே இருந்தாலும் இதுக்கு மட்டும் என்ன ஸ்பெஷல் சார்ஜ்? இந்தக் கோட்டு மருமான் ஸ்பெஷலா ?

சம்பத்: என்னவோ ரொம்ப ரொம்ப விசேஷம்னு சொன்னார்.

அபிதா (பிரித்துப் பார்த்து): அடடே, மாப்பிள்ளை ஸ்பெஷல்னு இது!

[ரூபாயை முந்தானையில் முடிந்து கொள்கிறாள் அபிதா]

வக்கீல் (குடுகுடுவென்று ஓடி வந்தபடி): அதென்ன நீபாட்டுக்குப் பணத்தை எடுத்து வைச்சிண்டே. அது என் கோட்டு.

அபிதா (அலட்சியமாக) எங்க தோப்பனார் தெச்சுக் குடுத்த கோட்டு!

[மிடுக்காக வீட்டினுள் போகிறாள்]

சம்பத்: என்ன மாமா இது...ஒரே வார்த்தையிலே ஒங்களை மடக்கிப் போட்டுட்டுப் போய்ட்டாரே மாமி.... நீங்க இருக்கறதோ ஜனநாயக நாட்டிலே. இங்கே நடக்கறதோ ஏகாதிபத்தியமா இருக்கே!

வக்கீல்: ஒங்க மாமியோடே ஜனநாயகமே இப்படித்தான்டா இருக்கும்; அப்படின்னா அவ ஏகாதிபத்திய சொரூபம் எப்படி இருக்கும்னு ஊகிச்சுக்கோ!

சம்பத்: நான் போய்ட்டு வரேன் மாமா.

[போகிறான்]

அபிதா: (வந்துகொண்டே) என்ன இன்னும் அம்பியைக் காணமே.... போய்ப் பார்த்துட்டு வரேனா? பாவம்... பட்டம் வாங்கினவன் களைச்சுப் போயி......

வக்கீல்: பட்டம் என்ன பாறாங் கல்லா தூக்கிறு களைச்சுப் போறதுக்கு? யுனிவர்சிடியிலிருந்து வெய்ட்டே கெடையாதுமே... அப்படியே இருந்தாலும் இவனு பட்டம் வாங்கப் போறான்......?

அபிதா (திகைத்து): என்ன.... என்ன பேத்தறேள்....?

வக்கீல்: ஒன் மகன் சங்கர் இந்த வருஷம் பி. எஸ்ஸி. பாஸ் பண்ணலே......

அபிதா: பாஸ் பண்ணலியா....? பின்னே அவன் பட்டமளிப்பு விழாவுக்குப் போனானே!

வக்கீல்: ஏன் போகப்படாது? மிஸ் மஞ்சுளா பட்டம் வாங்கப் போறாளே.....

அபிதா (கலவரத்துடன்): அவ யாரு மிஸ் மஞ்சுளா......?

வக்கீல்: சாரி.... அவ....

[வாசல் புறமிருந்து 'அம்மா' என்ற குரல் கேட்கிறது]

வக்கீல்: ஒம் பிள்ளை வந்துட்டான்.... சீறிவிழாமல் கேட்டுக்கோ.....

[சங்கர் வருகிறான்]

அபிதா: அம்பீ.... என்ன இது?

சங்கர்: அம்மா.... எங்களை ஆசிர்வாதம் பண்ணும்மா....

[மஞ்சுளாவும் வருகிறாள்]

அபிதா: ஆருடா இவ.....

சங்கர் (அதிசயமாக): என்னம்மா இது... ரிஸப்ஷனுக்குப் பிரமாதமா ஏற்பாடு பண்ணி வைச்சிருக்கேன்னு போன்லே சொன்னே...... இப்போ கிராஜுவேட் வந்து நின்னப்புறம் 'வா'ன்னு கூப்பிடாம நிக்கிறியே....

அபிதா: நேக்கு ஒண்ணும் புரியலியேடா.. அம்பீ..... பெயிலானவாளுக்குன்னு தனியா கான்வொகேஷன்....

வக்கீல்: கர்மம்..... கான்வகேஷன்!

அபிதா: சித்த பேசாத இருக்கேளா.... என்னைப் பேச விடறேளா....? ஏண்டாம்பீ! பெயிலானவாளுக்குன்னு 'அது' நடத்தறாளா?

சங்கர்: ஏம்பா.... நீங்க அம்மாகிட்டே ஒண்ணுமே சொல்லலியா....?

அபிதா: அடியம்மா.... ஒரே மூடுமந்திரமான்னு இருக்கு..... இவ யாருடா....?

சங்கர்: என் ஒய்ப்!

அபிதா: என்னது.... எங்களுக்கெல்லாம் தெரியாம, திடீர்னு கலியாணமா....?

சங்கர்: திடீர்னு ஒண்ணுமில்லேம்மா.... நான் இவளை மூணு வருஷமா சின்சியரா லவ் பண்ணினேன்.

வக்கீல்: அபிதா..... பி. எஸ்ஸி. மூணு வருஷப் படிப்பு..... பய கோர்ஸ் கம்ப்ளீட் பண்ணிட்டான்.

சங்கர்: நீ கல்யாணத்தை அப்ஜக்ட் பண்ணினே...... நான் கல்யாணத்தையே பண்ணிண்டு வந்துட்டேன்.

அபிதா: நன்னாருக்கு.... நீ 'இதுவா' நெனைக்கிறவ பேரு 'மேரி'ன்னு சொன்னியே.

சங்கர்: மேரி குமாரி மஞ்சுளான்னு பேரு. நாங்க செல்லமா மேரின்னு கூப்பிடுவோம்.

வக்கீல்: மேலகரம் ரிஷிபர்வதன் குமாரி—புத்ரி மஞ்சுளா!

அபிதா: நான் என்னத்தைக் கண்டேன்? 'மேரி'ன்னு சொன்னதும் கிறிஸ்துவாளோன்னு நெனைச்சு வேண்டாம்னேன்.

சங்கர்: அப்போ நீ இதை இப்ப அப்ரூவ் பண்றயா.....?

அபிதா: அதெப்படி முடியும், அதெப்படி முடியும்னேன்? பெத்தவாளுக்குத் தெரியாம கல்யாணத்தைப் பண்ணிண்டு வந்துட்டா நான் ஏத்துப்பேனு?

சங்கர்: அவளோடே பேரன்ட்ஸுக்குத் தெரியும். என்னோடே பேரன்ட்ஸுக்கும் தெரியும் — அதாவது அப்பாவுக்குத் தெரியும்னேன்.

அபிதா: என்னு, ஒங்களுக்கும் தெரியுமா?

வக்கீல்: பகு பேஷா தெரியும்! இந்தக் கல்யாணத்தை நடத்தி வைச்சதே நான் தானே!

அபிதா (நிதானமாக): ஒண்ணு சொல்றேன், கேக்கறேளா?

வக்கீல்: என்ன?

அபிதா: வக்கீல் தொழிலை சப்ஜாடா விட்டுடுங்கோ..... புரோகிதத்தைத் தொழிலா வைச்சுக்குங்கோ.... இருக்கவே இருக்கு, கோட்டு வாடகை. சைட் பிசினஸ்!

சங்கர்: அம்மா! எங்களுக்கு நடந்தது ரிஜிஸ்டர் மாரேஜ்!

அபிதா: கல்யாணம் ஆயிடுத்துன்னு சொன்னு நான் பாவ புண்ணியத்துக்குப் பயந்துண்டு இந்தக் கல்யாணத்தை ஏத்துப்பேன்னு நினைக்கிறேளா...? அதான் நடக்காதுன்னேன்!

சங்கர்: அம்மா... ப்ளீஸ்.... இந்த ஒரு தடவை மன்னிச்சுடும்மா... அடுத்த தடவை யிலேர்ந்து ஷ்யூரா ஒன்னைக் கேட்டுண்டே....

மஞ்சுளா (திகைப்புடன்): ஓ.. மிஸ்டர் ஷங்கர்! வாட் டூ யூ மீன்?

அபிதா: மீனு! கர்மம், கர்மம் வந்த வொடனே மீனக் கேளு... 'மேரி'ன்ன வொடனேயே நினைச்சேன்.' இப்படியெல்லாம் எதையாவும் கேட்டுத் தொலைப்பான்னு




# ஒவல்டின்

## ஒப்பற்ற 'ஒலிம்பிக்' பானம்

### 'ஒலிம்பிக்' தென்பை உங்களுக்குத் தருவதற்கென சக்தி செறிந்து வருகிறது.

மற்றெந்த உணவு பானத்தையும் விட அதிக மால்ட் அடங்கப்பெற்று, சக்தி செறிவூட்டப்பட்டது ஒவல்டின். மால்ட் என்பது தென்பு தரும், இயற்கையின் ஒப்பற்ற ஊட்டப் பொருள்களில் ஒன்றாகும். அதிக மால்ட், பால், வைட்டமின்கள், புரதங்கள், கார்போஹைட்ரேட்டுகள், யாவும் அடங்கிய ஒவல்டின், ஆட்ட வீரர்களுக்குக் கிடைக்கும் அதே 'ஒலிம்பிக்' தென்பை உங்கள் குடும்பத்திற்கும் அளிக்கும்.

அருந்துங்கள் ஒவல்டின் : உடல்நலத்திற்கு ஒவல்டின், வலிமைக்கு ஒவல்டின், தென்புக்கு ஒவல்டின்.

*சக்தி செறிவிக்கப்பட்ட ஒவல்டின், 1932 முதல் நடத்தப்பட்டுவரும் 7 ஒலிம்பிக் ஆட்ட விழாக்களிலும் அங்கீகாரம் பெற்ற ஒரே ஒரு பானமாக விளங்கிவருகிறது.

## ஒவ்வொரு துளியிலும் ஊக்கம் துள்ளும்

ஒவல்டினை பாரதத்தில் ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்., நிறுவனம், லண்டனிலுள்ள, ஏ வாண்டர் லிமிடெட்டின் லைசென்ஸ் பெற்றுத் தயாரிக்கிறது

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்.


உங்கள் வங்கி எத்தகையது?
நாட்டின் விவசாயத் தொழில் அபிவிருத்தியிலும், சுபீட்சத்திலும் பங்கு கொள்ளும் பெருமையுடையது உங்கள் வங்கி. நாடு தன்னிறைவு பெறும் லட்சியத்தை சாதிக்க விவசாய லேவாதேவிகளையும், இதர சேவைகளையும், மற்ற எல்லா வகை உதவிகளையும் புரியும் வங்கி இது.
உணவுத்துறையில் தன்னிறைவு பெற "உற்பத்தியைப் பெருக்கும்" முயற்சியில் விவசாயிகளுக்குத் தேவையான விதைகள், உரங்கள் தருவதிலிருந்து, விளைபொருள் விற்பனை மற்றும் சேமிப்பு வசதிகள் செய்து கொடுப்பது வரை சகல உதவிகளையும் கூட்டுறவு வங்கிகள்தான் வழங்குகின்றன.
எம்மிடமுள்ள உங்கள் டிபாசிட்டுகள் மேன்மேலும் பெருகி உங்களுக்கு லாபம் தருவதுடன் தேசிய வளர்ச்சி உருப் பெறவும் உதவுகின்றன.
இது உங்கள் வங்கி
உங்கள் எதிர்காலத் தேவைகளுக்காகச் சேமியுங்கள்.
சென்னை மாநில கூட்டுறவு வங்கியில் சேமியுங்கள்.
தைரியத்துடன் எதிர்காலத் தேவைகளைச் சமாளிக்கலாம்.
சென்னை மாநில
கூட்டுறவு வங்கி லிமிடெட்
271, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை-1
THE MADRAS STATE
CO-OPERATIVE BANK LIMITED
271, Angappa Naick Street, Madras-1

(கண்டிப்புடன்) அம்பி.... நீ என்ன சொன்னாலும் இவளை நான் மாட்டுப் பொண்ணா ஏத்துக்கப் போறதில்லே....

வக்கீல் (ரோஷத்துடன்): வாண்டாம்.... வுட்டுடு.... நான் ஏத்துண்டாச்சு.

அபிதா: என்ன சொல்லேள்....?

வக்கீல்: நான் சம்மதம் குடுத்தாச்சு.... என் இஷ்டப்படிதான் எல்லாம் நடக்கும். வாயைத் தொறக்கப்படாது.....

அபிதா: ஐயய்யோ.... இருந்திருந்து உங்களுக்குத் தைரியம் வரணுமோ....? ஈசுவரா! ஆபத்பாந்தவா.... அநாதரட்சகா......! என்னடாப்பா சோதனை இது.....!

சங்கர் (திகைத்து): என்னம்மா, இது! ஏன் அழறே.....?

வக்கீல்: அழட்டும்டா....மத்தவாளை அழ வைக்கிறவ இன்னிக்காவது அழட்டுமே.

அபிதா (அழுகையுடன்): என்னை அழவிட்டுத் நீரணும்னு ஆளுக்கொரு பக்கமா படுத்தறேள்...... படுத்துங்கோ படுத் — (வெடுக்கென்று) இத்தனை நாழியா அழறேனே..... 'ஏண்டி அழறே'ன்னு ஒரு வார்த்தை கேக்கத் தோண்றதா.... 'அழாதே அபிதா'ன்னு ஒரு சமாதானம் சொல்லத் தோண்றதா?

சங்கர் (ரகசியமாக): அப்பா, அம்மாவை ஏன் அழ விடறேள்?

வக்கீல் (இன்னும் ரகசியமான குரலில்): மண்டு..... இங்கே அதிகாரம் அவா கையிலேங்கிற ரகசியத்தை ஒன் பெண்டாட்டி தெரிஞ்சுண்டான்னா உன் கதி என்ன ஆகும்? இதெல்லாம் மஞ்சுளாவை மிரட்டி வைக்கத்தான். (உரத்த குரலில், சமாதானமாக) சரி.... சரி... அபிதா.... அழுததெல்லாம் போதும்... மறந்துடு.... கண்ணைத் துடைச்சுக்கோ.... (அருகே போகிறார்.)

அபிதா (வெடுக்கென்று):கையெ எடுங்கோ (மகனிடம் தழுதழுத்த குரலில்) அம்பி..... ரிஜிஸ்தர் கல்யாணம் ஆயிடுத்துன்னு துணிஞ்சு பொய் மட்டும் சொல்லப்படாதுடா... வர்ற முகூர்த்தத்திலே ஒங்க ரெண்டு பேருக்கும் ஜாம் ஜாம்னு நானே கல்யாணத்தை நடத்தி வைச்சுடறேன். பொய் மட்டும் சொல்லப்படாது.......

வக்கீல்: அடடே! உன்னைச் சம்மதிக்க வைக்கணும்ங்கிறதுக்காக நாங்க பொய் சொன்னோம்னு எப்படிக் கண்டு புடிச்சே?

அபிதா: நீங்க ஸம்பந்தப்பட்டிருக்கேளோன்னோ....? அது ஒண்ணு போதாதா பொய்யினு புருவ் பண்றதுக்கு... வாடிம்மா. மஞ்சுளா.... கிராஜுவேட். ரிஸப்ஷனுக்கு ஏற்பாடு பண்ணி வைச்ச விருந்து கல்யாண ரிஸப்ஷனுக்கா மாறிடுத்து.....

சங்கர்: இப்பகூட நாங்க ரெண்டுபேருமே கிராஜுவேட்தாம்மா...அவ கிராஜுவேட்... நான் அண்டர் கிராஜுவேட்!

வக்கீல்: என்னிக்கும் அண்டர் கிராஜுவேட்டாகவே இருந்துடாதே. மொதல்லே டியூடோரியலுக்கு ஏற்பாடு பண்ணு.

சங்கர்: எனக்கெதுக்குப்பா டியூட்டர்...? இவளே பிரஸிடென்ஸி பஸ்டாச்சே...

அபிதா: அடேடே பிரஸிடென்ஸி காலேஜுக்கே இவதான் பஸ்ட்டா?

## துன்பம் தரும் செல்வம்

பொருளைத் தேடுவதிலும் துக்கம்; சேமித்த பொருளைக் காப்பதிலும் துக்கம். அதன் அழிவிலும் துக்கம்; செலவிலும் துக்கம்: இவ்விதம் துக்கமயமான செல்வம் எதற்கு?

- வடமொழி சுலோகம்

வக்கீல்: கர்மம்! இவ இந்த மாநிலத்துக்கே முதல்.... ஏண்டா, சங்கர்.... இவ பிரஸிடென்ஸி பஸ்ட்டா இருந்தா.....

சங்கர் (வெட்கத்துடன்): அவளே டியூஷன் சொல்லித் தரேன்னு பிராமிஸ் பண்ணிட்டா.

வக்கீல்: டியூஷன் ரொம்ப நாள் நீடிக்கணுமேன்னு அடிக்கடி பெயிலாகாதே.....

சங்கர்: போங்கப்பா.... (மஞ்சுளாவிடம்) ஓ..... மேரி....! ஒங்க மாமியாரை நமஸ்காரம் பண்ணு....

மஞ்சுளா: ஓ.... மாமி... நமஸ்காரம் பண்ணு.....

அபிதா: நன்னாயிருக்கு.... ஒன்னே மாமி வேறே நமஸ்காரம் பண்ணணுமா?..... வேண்டியதுதாண்டிம்மா....

மஞ்சுளா: ஓ... நோ... நான் நமஸ்காரம் பண்ணு.

அபிதா: பண்ணு.... பண்ணு... ஏன்னா, பக்கத்துலே வந்து நில்லுங்களேன்.....

[வக்கீல் மனைவியுடன் சேர்ந்து நிற்க மகனும் மருமகளும் நமஸ்காரம் செய்கின்றனர். பின்னர் மஞ்சுளாவுடன் சங்கர் உள்ளே போகிறான்.]

வக்கீல்: அபிதா.... நான் மிரட்டினவொடனேயே அழ ஆரம்பிச்சுட்டியே..... நெஜம்மாவே பயந்துட்டியா....?

அபிதா: நன்னாருக்கு..... நான் பயந்துட்டேன்னு சந்தோஷம் வேறே பட்டிண்டிருக்கேளா....? பயந்த மாதிரி நடிச்சேன்.

வக்கீல்: எதுக்கு நடிச்சே...?

அபிதா: என் மாட்டுப் பொண்ணு வந்திருக்காளோல்லியோ....? அவளுக்கு முன்னாலே நான் ஒங்க பேச்சுக்கு எதிர் வாதம் பண்ணிண்டிருந்தா நாளைக்கு அவளுக்கும் இதுவென்னு பாடமாகப் போயிடும்...? அப்புறம் அவ என் பிள்ளையை அல்லவா பாடு படுத்துவா....?

வக்கீல்: பேஷ்.... இந்த முன் ஜாக்கிரதை எங்கம்மாவுக்கு இல்லாமப் போயிடுத்தே. அடி அபிதா.... நீகூட இத்தாத்துக்குள்ளே அடியெடுத்து வைக்கறச்சே எப்படிப் பவ்யமா நடந்துண்டே..... அடங்கி... ஒடுங்கி...... நாணி.... கோணி....

[புதுப் பெண்ணைப் போல் நடந்து காட்டுகிறார்]

அபிதா (மிகுந்த நாணத்துடன்): ம்.... போங்கன்னா.... சும்மா கேலி பண்ணிண்டு...

— இரை

"**மீ**சை முளைத்த ஆண் பிள்ளையாக இருந்தால் வெளியே வந்து பேசு, சாஹேப்!"

"அவருக்கென்னப்பா கவலை? போலீசுக்கு 'போன்' பண்ணித் துணைக்கு அழைத்துக் கொள்ள மாட்டாரா? அவர் பழக்கப்பட்டவர்தானே?"

"ஆகா! வாரேவா! போலீஸாம் போலீஸ்! அரே பார் இது 1942 இல்லே, அறுபத்தி ஆறு தெரியுமா? போலீஸாம் போலீஸ்! கபர்தார்!"

"ஆமாம்! ஆமாம்! 42 இல்லே, 66! ஏ, சாஹேப்! மானேஜர் சாப்! பொம்மனாட்டி மாதிரி ஏன் முடங்கிக் கிடக்கிறாய்? வெளியேவா!"

தொடர்ந்து இடி முழக்கம் போன்று சொல் மாரிகளும் அட்டகாசச் சிரிப்பொலியும் பிரும்மாண்டமான பங்களாவில் வசதிகள் வாய்ந்த நமது அறையில் ஒடுங்கிக் கிடந்த மானேஜர் ரகுவீர் சிங்கின் செவிகளில் தாராளமாக விழுந்தன. வெகுண்டெழுந்துள்ள மல் கட்டாக்கள் (நிலக்கரி வெட்டும் தொழிலாளர்கள்) முன்பு துணிவாகச் செல்லவும் ரகுவீர் சிங்குக்குத் தைரியமில்லை! ஆணவமும், அகம்பாவமுமே உருவெடுத்து வந்தாற் போன்ற ரகுவீர் சிங் எண்சாண் உடம்பும் ஒரு சாணாகக் கூனிக் குறுகி அவமானம் தாளாது இன்னது செய்வதென்று அறியாது கோப்பையில் விஸ்கியை ஊற்றி உறிஞ்சிக் கொண்டேயிருந்தார்.

அவரது அறையிலேயே, அவருக்கு மிக அருகிலேயே முக்காலியில் கைக்கெட்டும் தூரத்தில் டெலிபோன் இருக்கத்தான் செய்தது. அவர் மட்டும் நினைத்தால் அந்தக் கணமே டயலைச் சுற்றிப் போலீஸைப் பாதுகாப்புக்காக அழைத்துவிட முடியும். அச்செய்கை அவருக்கொன்றும் புதிது இல்லைதான். ஆனால் அவர் தயங்கத்தான் செய்தார்.

"சாஹேப்! ஓ, மானேஜர் சாஹேப்! நாங்கள் கோழைகள் இல்லை. வீணாகப் போலீசுக்கு வேலை வைக்க வேண்டாம். இதோ மேல் அங்கியை அகற்றி விட்டுத் திறந்த மார்போடு நிற்கிறோம். தாங்கள் தற்காப்புக்காக வைத்திருக்கும் கைத்துப்பாக்கியைத் தாராளமாக எங்கள் மீது பிரயோகிக்கலாம். இது நாற்பத்திரண்டு அல்ல போலீஸைத் துணைக்கு அழைப்பதற்கு! அறுபத்தாறு, சாஹேப், அறுபத்தாறு!"



ஏழை மல்கட்டாக்களின் இங்கிதமற்ற ரசாபாசமான ஏளனச் சொற்களிடையே கணீரென்ற வெண்கல தொனியில் கௌரவமாக ஒலித்த அந்தக் குரலுக்குரியவனான போலாவைத்தெரிந்து கொண்டதும் இடியோசை கேட்ட நாகம் போன்று நடு நடுங்கினார் ரகுவீர் சிங். எந்த போலாவை அவர் தமது சித்தத்திலிருந்தே அகற்றிவிட முயன்றாரோ அவனே அவரை மேலும் குத்திக் கிளறுவது போல், "42 அல்ல, 66!" என்று நிதானமாக, ஆனால் ஆணித்தரமாகக் கூறியது அவரை மருள வைத்தது. 'இனி நமக்கு இவ்வுலகில் வாசம் நிமிடக்கணக்கில் தான் போலும். இனி செய்வதற்கேதுமில்லை' என்று முடிவு கட்டிய ரகுவீர்சிங் தம் வாழ்நாளிலேயே முதல் முறையாக ஆண்டவனைத் தியானிக்க முற்பட்டார்!

"42 அல்ல, 66."

போலாவின் ஆணித்தரமான அறைகூவல் ரகுவீர் சிங்கின் நயனத்திரையில் 1942-ம் ஆண்டைப் படம் பிடித்துக் காட்டியது.

வருடம் 1942! சுதந்திர வேள்வி தீவிரமாக நடந்துகொண்டிருந்த புனித ஆண்டு அது. மாந்தருக்குள் ஒரு தெய்வமான அண்ணல் காந்தி மகானின் தலைமையில், "சைத்தான் ராஜ்யமே, ஒழிக! வெள்ளையனே, வெளியேறு!" என்ற கோஷம் கிளம்பி அன்னையின் அடிமைத் தளையை அறுப்பதற்காக ஆயிரம் ஆயிரம் தவப் புதல்வர்கள் உயிர் நீத்த தியாக ஆண்டு அது. ஈவிரக்கமின்றி ஏகாதிபத்தியம் தன் கொடூர ஆட்சியினால் இம்மண்ணிலே உதித்து இம்மண்ணுக்காகப் பாடுபட்ட அன்னைமார்களை சித்திரவதை செய்து பழி தீர்த்துக் கொண்ட ரத்தக் கறை படிந்த பாரத நாட்டு சுதந்திரப் போராட்ட வரலாற்றைத் தாங்கி நின்ற ஆண்டு அது. அதை யாரால் மறுக்க இயலும்?

நல்ல மரத்திலும் புல்லுருவி என்பார்கள். அதுபோல் சுயநலத்தின் பொருட்டு மானத்தை விற்று வெள்ளையரது கால் பிடித்து வயிறு வளர்த்த ஜனப் பிறவி

களும் இல்லாமற் போகவில்லை. அத்தகையதொரு புல்லுருவியாகத்தான் மானேஜர் ரகுவீர் சிங்கும் இருந்தார்.

இன்று போல் அன்றும் அவர் ஒரு நிலக்கரிச் சுரங்கத்தின் மானேஜராக இருந்தார். அப்போதுதான் அந்தப் பயங்கரச் சம்பவம் நடந்தது. அதை அவரால் இன்று வரை தமது நினைவிலிருந்து புறக்கணிக்க முடியவில்லை....

இன்று 'சுரங்கச் சீர்திருத்தச் சட்டம்' அமுலுக்கு வந்துள்ளது. ஆண்டுதோறும், 'சுரங்க சுரக்ஷா வாரம்' கொண்டாடி விபத்துக்களைத் தவிர்க்கத் தீவிர முயற்சிகள் நடைபெறுகின்றன. சுரங்கங்களை நிர்வாகம் செய்யும் மானேஜர்களுக்கும் திறமை வாய்ந்த மல்கட்டாக்களுக்கும் ஸர்தார்கள் ஆகியோருக்கும் பரிசுகள் வழங்கி ஊக்கமளிக்கிறார்கள். ஆனால் அன்று நிலைமையே வேறு!

பூமிக்கு ஆயிரக்கணக்கான அடிகள் கீழே கும்மிருட்டில் நிலக்கரியை வெட்டுவது இலகுவல்ல. இப்போதிருப்பதுபோல் அந்த நாட்களில், மல்கட்டாக்களுக்கு பாட்டரி வசதி வாய்ந்த 'காஸ் லாம்பு'கள் அளிக்கப்படவில்லை. முழங்கால் வரை மூடிப் பாதுகாக்கும் தோலால் ஆன பூட்ஸுகளோ, ரப்பர் பூட்ஸுகளோ கிடையா. தலைக்குப் பாதுகாப்பாக உலோகத் தொப்பிகளும் கிடையா. இயந்திர வசதிகளும் குறைவாக இருந்த அந்த நாட்களில் மனிதனே கடுமையாக உழைக்கவேண்டியிருந்தது. போதாததற்கு அந்த நாட்களில் மதுவிலக்கு என்பதே அமுலில் இருக்கவில்லை. ஆகவே மல்கட்டாக்கள், முக்கியமாக இரவு ஷிப்டில் வேலை செய்வோர்கள், நிறைய 'புட்டி போட்டு' விட்டுப் போதையில்தான் இருப்பார்கள். ஏடாகூடமாக ஏதாவது நடந்தாலும் கேட்பாரில்லை. ஏனெனில், மானேஜர்களுக்கு அவர்கள் தற்காப்புக்காகச் சுடவும் அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது.

இந்த லட்சணத்தில் எழுத்து வாசனையற்ற இந்த எளிய மக்களை வஞ்சித்துப் பொருளீட்டி இந்த நாட்டுச் செல்வத்தைச் சுரண்டித் தாயகம் அனுப்ப அந்த நாளைய வெள்ளைக்கார துரைகள் தயங்கவோ, தவறவோ இல்லை. பாவம்! ஏழைகள் என்ன செய்வார்கள்? இக்காலத்தில் இருப்பதுபோல் தொழிலாளர் நன்மைக்காகப் பாடுபடும் யூனியனோ, சங்கமோ இருந்ததா என்ன?

பீஹார், வங்காள மாகாணங்களில் ஏராளமான நிலக்கரிச் சுரங்கங்கள் உண்டு. அவைகளைப் பெரும்பாலும் ஆங்கிலக் கம்பெனிகளே நிர்வகித்து வந்தன. அந்தச் சுரங்கமொன்றில் மிஸ்டர் ஹாப்ஸன் என்னும் ஆங்கில கனவான் மானேஜராகப் பணியாற்றி வந்தார். அவர் திருமணம் செய்துகொள்ளாமல் தனிக் கட்டையாக இருந்தார். எப்போதோ அவர் ஒரு பெண்ணைக் காதலித்தாராம். ஆனால் அவள் அவரை ஒதுக்கிவிட்டு வேறொருவனை மணந்து கொண்டாளாம். அதனால் மனம் வெறுத்து அவர் அப்படி இருந்தார் என்று அக்கம்பக்கத்தில் பேசிக் கொண்டார்கள்.

அவரிடம் தோட்டக்காரனாகப் பணியாற்றி வந்தான் சுஜான் சிங். உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த சுஜான் சிங் நல்ல உழைப்பாளி. அவனது ஒரே மகன்தான் ரகுவீர் சிங். அவனுடையதாயார் மானேஜரின் பங்களாவில் அவரது நல்ல ஜாதி நாய்களைப் பராமரித்து வந்தாள்.



# அஹிம்சா பரமோ தர்ம:

லலிதா பரமேசுவரன்

மிஸ்டர் ஹாப்ஸனுக்கு ரகுவீர் சிங்கின் மீது ஒரு பிடிப்பு விழுந்து விட்டது. சிவந்த மேனியும் சுருண்ட கேசமுமாகப் பார்க்க நன்றுக கம்பீரமாக இருப்பான் ரகுவீர். அவனது வசீகரத் தோற்றத்தால் கவரப்பட்ட துரை அவனைத் தம் செலவிலேயே படிக்க வைத்தார். மிகவும் கூர்மையான அறிவு படைத்த ரகுவீர் விரைவிலேயே சகல பரீட்சைகளிலும் படித்துத் தேறி அந்த நாளைய பீகார் பல்கலைக் கழகத்தில் பி. எஸ்ஸி. பட்டம் பெற்றான். அந்தச் சமயம்தான் மிஸ்டர் ஹாப்ஸன் மூப்புத் தட்டிய காரணத்தால் தம் தாயகம் திரும்பத் தீர்மானித்தார். ரகுவீரின் கல்வியும் ஹாப்ஸனின் நட்பால் நிலக்கரி சுரங்கங்களைப் பற்றிய அநுபவ அறிவும் ஹாப்ஸனை மேலும் கவரவே அவர் ரகுவீரைத் தம்முடன் இங்கிலாந்துக்கு அழைத்துச் சென்றார். ரகுவீர் அங்கு ஒரு 'மைனிங் ஸ்கூலில்' படித்து வரலானான்.

நான்கே ஆண்டுகளில் இங்கிலாந்தில் சுரங்கப் பள்ளியில் படித்துத் தேறிப் பட்டம் பெற்ற ரகுவீர் அதே மிஸ்டர் ஹாப்ஸனின் சிபாரிசினால் பீஹாரில் ஒரு நிலக்கரிச் சுரங்கத்தில் மானேஜர் பதவி ஏற்றார்.

ஏழைக் குடியில் பிறந்த தன்னை இத்தகையதொரு உன்னத நிலைக்குக் கொண்டு வந்த காரணத்தால் ரகுவீருக்கு மிஸ்டர் ஹாப்ஸன்மீது அளவுகடந்த நன்றி உணர்ச்சி இருந்தது. ஆனால்

அந்தமட்டோடும் நின்றிருந்தால் நலமாக இருந்திருக்கும். அதுதான் இல்லை.

ஹாப்ஸன்பால் அவர் கொண்ட நன்றி உணர்ச்சி அவரை வெள்ளைக்காரர்களை மிகவும் மதிக்க வைத்தது. மேலும் இங்கிலாந்து வாசம் அவரைப் பெரிதும் மயக்கிவிட்டிருந்தது. அதன் காரணமாக அவருக்குத் தம் நாட்டு மக்கள் மீதே வெறுப்பும் இளக்காரமும் தோன்றலாயின. போதும் போதாதற்கு ஒரு வெள்ளைக்காரச் சீமாட்டியை வேறு திருமணம் செய்து கொண்டார்! பிறகு கேட்கவா வேண்டும்?

ஆடம்பர வாழ்க்கை, கேளிக்கை, கூத்து, உயர் ரக வெளிநாட்டு மதுபான வகைகள் போன்ற வாழ்க்கை ''வசதி''களைப் பெருக்கிக் கொண்டால் செலவுக்கு வெள்ளையப்பன் வேண்டாமா? கைநிறைய ஊதியம் பெற்றும் அவரால் சமாளிக்க இயலாதபோது வேறு வழிகளைத் தேடிக் கொண்டதன் பயனாக ''ஊழல்'' சாக்கடையில் நீந்தத் தலைப்பட்டார்.

அவரது சுரங்கத்தில் பணியாற்றிய ராம்லால் பண்புள்ள ஓர் ஏழை மல்கட்டா. எட்டாவது வரை படித்திருந்தும் ஏழ்மையின் காரணத்தால் கூலி வேலைக்கு வந்த அப்பாவி. குடி, புகை, சுருட்டு ஏதும் அற்ற சீலவான். வேலைநேரம் போகத் தான் உண்டு, தன் துளசி ராமாயணம் உண்டு என்று இருப்பவன். அவனது ஒரே மகன்தான் போலா. இரண்டே பிராயமாக இருந்த போலாவை அவன் பொறுப்பில் விட்டுவிட்டு அவனது மனைவி மஞ்சு மறைந்து பத்தாண்டுகளுக்கு மேல் ஆகிவிட்ட போதும் ராம்லால் மறுமணம் செய்து கொள்ளவில்லை. அவனது ஒரே லட்சியம் போலாவை ஒரு ''சர்க்காரி வேலையில்'' சேர்த்து விடுவது. அவன் மகன் போலா அவனைப் போல் கூலி வேலை செய்யக் கூடாது. ஆகவே போலாவை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும் என்ற உத்வேகத்தில் ராம்லால் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்தான். தந்தைக்கு ஏற்ற மகனாகப் போலாவும் தன் பொறுப்பறிந்து நன்றாகப் படித்து வந்தான்.

மல்கட்டாக்களில் சற்றே படித்தவனான ராம்லால் நாளுக்கு நாள் செல்வாக்குப் பெற்று வந்ததைக் கண்டு ரகுவீர்சிங் விழித்துக் கொண்டார். முளையிலேயே இதைக் கிள்ளி எறியாவிட்டால் பின்னர் தனக்கு ஊறு நேரக்கூடும் என்று அவர் உணர்ந்து கொண்டதுதான் தாமதம், தமது அடக்குமுறை வன்முறைகளைக் கையாளத் திட்டமிட்டார். ராம்லால் ஆத்திரவசப்பட்டுக் கத்துவான்; அதுவே காரணமாக அவனை வேலையை விட்டு நீக்கி விடலாம் என்று அவர் நினைத்திருந்தார்.

ஆனால் ராம்லாலோ ஆத்திரமடைந்தாலும் நிதானத்தை இழக்காமல் தனக்கு ஆதரவாக இருந்த நண்பர்களை உடனழைத்துக் கொண்டு மானேஜரின் பங்களாவில் நியாயம் கோரி நின்றான்.

மானேஜரின் தன்மானத்துக்குச் சவுக்கடி ராம்லாலின் செய்கை. ஓர் ஏழை மல்கட்டாவுக்கு இத்தனை துணிவா? ஆணவமே உருவான ரகுவீர் அதைச் சகிப்பாரா? வார்த்தைகளைச் சூடாக வீசியதோடு நில்லாமல் துப்பாக்கிப் பிரயோகத்திலும் ஈடுபட்டார்.

''அம்மா!'' — ஓர் அலறலுடன் வயிற்றைப் பிடித்துக் கொண்டு சாய்ந்த ராம்லால் பின்னர் எழுந்திருக்கவேயில்லை.

அச்சமயம் நாட்டில் பயங்கர சூறைக்காற்று போல் வீசிக் கொண்டிருந்த சுதந்திரச் சூறாவளி ரகுவீர்சிங்கை நிரபராதியாக்கப் பெரிதும் உதவியது. உத்தமன் ராம்லால் உயிரைக் கொடுத்தும் ரகுவீரைக் காப்பாற்றி விட்டான்....

ஆம்! ரகுவீர்சிங் அந்தச் சூழ்நிலையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு ஏகாதிபத்தியத்தின் அடக்குமுறைகளைப் பயன்படுத்திக் கொண்டு தமக்கு எதிராகக் கிளம்பி இன்னல் விளைவிக்கக்கூடியவர்களை விலக்கிக் கொண்டு விட்டார். ராம்லாலை அரசாங்கத்துக்கு எதிராக ''சுதேசிகளுடன்'' தொடர்பு கொண்ட சதிகாரனாக்கி அவனைப் பிடித்துக் கவிழ்த்ததற்கு மாட்சிமை தாங்கிய மன்னர்பிரானின் பிரதிநிதியிடம் நற்சாட்சிப் பத்திரமும் வாங்கிக் கொண்டார்! ராம்லாலின் ஆதரவாளர்களைக் கம்பி எண்ணவும் வைத்து விட்டார்.

ஆனால் சிறுவன் போலாவின் உள்ளத்தில் எத்தனை ஆழமான காயம் உண்டாகிவிட்டிருந்ததென்பதை ரகுவீர் சிங் உணரவில்லை. தந்தையின் கோர மரணம், போலாவை வாட்டி வதைத்தது. ''என் தந்தையைக் கொன்ற பாவியின் அகங்காரத்தையும் ஆணவத்தையும் அகம்பாவத்தையும் ஒடுக்கிப் பழிக்குப் பழி வாங்கா விட்டால் நான் மனிதப் பிறவியே இல்லை'' என்று அவன் சூளுரைத்ததாகக் கேள்விப்பட்ட போதுதான் பயமே அறியாத ரகுவீர் சிங்கின் நெஞ்சிலும் திகில் பிடித்துக்கொண்டது. இருந்தாற்போலிருந்து போலாவின் உருவம் அவர் கண் முன் தோன்றி அவரைக் கதிகலங்க வைத்து அவரது நிம்மதியையும் குலைத்து விடுவதுண்டு. நினைவுத் திரையினின்றும் அவரால் போலாவை அகற்றவே இயலவில்லை.

காலச்சக்கரம் சுழன்றது. அதன் சுழற்சியில் எத்தனையோ நினைக்க வொண்ணாத மாறுதல்கள் நிகழ்ந்து விட்டன. பாரதம் சுதந்திரம் பெற்ற நிகழ்ச்சி அவைகளுள் சரித்திரப் புகழ் வாய்ந்த புனித சம்பவம் ஆகும்.

ஆட்சி பீடத்தில் அமர்ந்து செங்கோல் செலுத்திய நாட்டில் இனியும் தங்குவது உசிதமல்லவென்று முடிவு கட்டி ஏராளமான ஆங்கிலேயர்கள் தாயகம் திரும்பியபோது அவர்கள் வகித்த பதவிகளுக்கு ஆட்கள் தேவைப்பட்டனர்.

மத்தியப் பிரதேசத்தில் ஏராளமான நிலக்கரிச் சுரங்கங்கள் திறக்கப்பட்டன. இவைகளைத் திறமையாக நிர்வகிக்க சுரங்கப் பள்ளியில் படித்துப் பயிற்சி பெற்ற மானேஜர்கள் தேவைப்பட்டபோது கிழவராகி விட்ட ரகுவீர் சிங் தாமும் பணியாற்ற முன் வந்தார். மத்தியப் பிரதேசத்தில் கிருஷ்ண நகர் நிலக்கரிச் சுரங்கத்தின் மானேஜராக நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஆனால் அங்கே ஒரு கூலியாளாகத் தாம் கனவிலும் நடுங்கிவந்த போலா இருக்கக் கூடும் என்று அவர் நினைக்கவேயில்லை.

# பிரிட்டானியா

# க்ளாக்ஸோ

தேநீர் அருந்தும் வேளை
யில் உங்கள் குடும்பத்தின
ருக்கு இனிய சுவையுள்ள
க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகளை
வழங்கி மகிழ்ச்சி அடையுங்
கள்! பிரிட்டானியாவின்
க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகள்
சிறுவர்களுக்கும் பெரியவர்
களுக்கும் புஷ்டி தருகின்ற
சிற்றுணவாகும். தேநீர்,
காபி, குளிர்ந்த பானம்
ஆகியவை அருந்துகையில்
க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகளை
வழங்குங்கள்.

## பிரிட்டானியா பிஸ்கெட்டுகள்





தி பிரிட்டானியா பிஸ்கெட் கம்பெனி லிமிடெட்

## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன் குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக் கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.




100 ஆண்டுகளுக்கு மேலாக புத்திசாலித் தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டுவருகிறது.

LPE Aiyars. F. 10 TM

அவரது பேராசையாலும் நிர்வாகக் கோளாறினாலும் கிருஷ்ணநகர் நிலக்கரிச் சுரங்கம் நஷ்டத்தில் நடைபெறலாயிற்று. சுரங்கத்தினின்றும் வெட்டி எடுக்கப்பட்ட நிலக்கரி ஏராளமாக டிப்போவில் குவிந்து விட்டது.

நிலக்கரி ஏராளமாகக் குவிந்து விற்பனையாகாமல் இருந்த காரணத்தால் சுரங்கத்தை மூட மானேஜர் யோசனை தெரிவித்துள்ளதாகச் செய்திகள் மஸ்கட்டாக்களுக்கு எட்டியதுதான் தாமதம். "ஐயோ அநியாயமாக நம் வயிற்றுப் பிழைப்பில் மண் விழுந்து விட்டதே" என்று அலறி அடித்துக் கொண்டு அவர்கள் மானேஜர் ரகுவீர் சிங்கின் பங்களாவை நோக்கிப் படையெடுத்து ரகளை செய்தார்கள்.

ரகுவீர் சிங் யோசிக்கலானார். அவரிடம் ஏராளமான சொத்துக்கள் சேர்ந்திருந்தன. அதில் கணிசமான பகுதியை அவர் தியாகம் செய்ய முன்வந்தால் கிருஷ்ண நகர் சுரங்கத்தைக் காப்பாற்ற முடியும். அதற்கு அவர் தயாராக இல்லையென்றால் இரவுக்கிரவே போலீஸ் துணையோடு ஜீப்பில் ஏறிப் பக்கத்து டவுனுக்குள் ஓடி அங்கிருந்து ராஜிநாமாக் கடிதம் கொடுத்து விலக வேண்டும்.

பணத்தாசை பிடித்த ரகுவீர் சிங் தியாகம் செய்ய முன்வராதது அதிசயமல்ல. அவரது மனைவியும் குழந்தைகளும் உல்லாசப் பிரயாணத்துக்காக நைநிதால் சென்றிருந்தது அவருக்கு நல்லதாகப் போயிற்று. இரவுக்கிரவே ஓடிவிட அவர் தீர்மானித்துப் பிரயாணத்துக்கான ஏற்பாடுகளை விரைவாகச் செய்யலானார்.

"ஸார்! மானேஜர் ஸார்!"

"சாஹப்! மானேஜர் சாஹப்!"

போலாவின் குரலொலியைக் கேட்டு திடுக்கிட்டார் ரகுவீர். கடவுளே! இன்னும் சிறிது நேரம் கழித்து போலா வந்திருக்கக் கூடாதா? தாம் மடிந்துவிட வேண்டியது தானா?

ரகுவீர் சிங்கை உயிராசை பலமாகப் பற்றிக்கொண்டது. கைத்துப்பாக்கியை முன்னெச்சரிக்கையாக வைத்துக் கொண்டாலும் கதவைத் திறக்க அவருக்குத் துணிவில்லை.

அவரது மனத்தில் ஓடிய எண்ணங்களை போலா ஊகித்திருக்க வேண்டும்.

"சாஹப்! அன்னை பவானி மீது ஆணை! நான் தங்களைக் கொல்ல வரவில்லை. நிராயுதபாணியாகத்தான் வந்திருக்கிறேன். இருட்டில் தனிமையில் ஒரு மனிதனைக் கொல்லும் பதிதன் அல்ல நான். என்னை அவ்வளவு மோசமாக நினைக்காதீர்கள். தங்களிடம் ஒரு வேண்டுகோள் விண்ணப்பிக்க விரும்புகிறேன். தயவு செய்து ஐந்து நிமிஷம் அவகாசம் கொடுங்கள்" போலா நிதானமாகப் பேசினான்.

நேர்மைக்குப் பெயர் பெற்ற ராம்லாலின் மகன் போலா எதிரியே யானாலும் அவனது வாய்மையில் ரகுவீர் சிங்குக்கு சிறிதளவும் ஐயம் இருந்ததில்லை. ஆகவே மௌனமாக அவர் கதவைத் திறந்து போலாவை உள்ளே வர அனுமதித்தார்.

போலா அவருக்கு வணக்கம் செலுத்தி விட்டு நிதானமாகப் பேசலானான்.



வானிலை ஆராய்ச்சி நிபுணர்: ஏன் சார்! இன்றைக்கு நல்ல மழை கொட்டப் போகிறது என்று அறிக்கையில் குறிப்பிடச் சொல்லியிருக்கேளே! அதற்கேற்ற சூழ்நிலை இருக்கா?

மேல் அதிகாரி: ஓ! பேஷா இருக்கு! இருபது வருஷமா நான் சொன்ன பேச்சைக் கேட்காத என் மனைவி இன்றுதான் கேட்டிருக்கிறாள். மழை வருவதற்கு இந்த ஒரு சூழ்நிலை போதாதா?

---

"சாஹப்! சுரங்கத்தை மூடிவிடத் தாங்கள் செய்துள்ள தீர்மானம் ஏராளமான ஏழைகளைக் கதிகலங்க வைத்து விட்டது. அதற்குக் காரண கர்த்தாவான தங்களைப் பழிக்குப் பழிவாங்க அவர்கள் தீர்மானம் செய்திருக்கிறார்கள்.

"ஆத்திரம் அவர்கள் அறிவை மறைத்து விட்டிருக்கிறது. தங்களுக்கு அவப் பெயர் உண்டாக்குவதையே தகுந்த தண்டனை என்று அவர்கள் முடிவுக்கு வந்திருக்கிறார்கள். ஆகவே டிப்போவில் ஏராளமாகக் குவிந்திருக்கும் நிலக்கரி ஸ்டாக்கைத் தீக்கிரையாக்க அவர்கள் திட்டம் போட்டிருக்கிறார்கள். தங்களது அஜாக்கிரதையினால் இது நேர்ந்ததாக நிரூபிக்கத் தீட்டிய திட்டமே இது.

"ஆனால் சாஹப்! என்னால் அதை ஏற்க இயலவில்லை. தாங்கள் என் எதிரி. என் தந்தையைக் கொன்றவர். தங்கள் செய்கை என் வாழ்க்கையையே நாசமாக்கிவிட்டது. இவ்வளவு வெறுப்பை மனத்தில் வைத்துக் கொண்டு நான் இந்த இரவு வேளையில், தங்களிடம் ஒரு யாசகம் வேண்டுவதன் காரணம் என் நாட்டுப் பற்றுத்தான்.

"சாஹப்! தயவு செய்து அன்னையின் சொத்தைக் காப்பாற்றுங்கள். தங்களுக்கு நேரவிருக்கும் அவப்பெயரையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.

"சாஹப்! நான் கோழையல்ல. என் நண்பர்கள் என்னைப் பற்றித் தவறாக நினைக்க இடம் தரவில்லை. ஆகவே இன்று இரவே நான் இங்கிருந்து கண்காணாத இடத்துக்குப் போய்விடுகிறேன். தாங்கள் நிம்மதியாக

வாழலாம். என்றால் தங்களுக்கு இனி எந்த வித இடையூறும் நேராது. ராம்! ராம்!''

ரகுவீர் சிங்கின் பதிலுக்குக் கூடக் காத்திராமல் தன் கடமை முடிந்துவிட்டதென்பது போல் போலா இருளில் மறைந்து சென்றான்.

பிரமை அடங்கியதும் அவர் தம்மையும் அறியாமல் போலா நின்றிருந்த இடத்தைக் கையால் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு நிமிர்ந்தார். எதிரே சுவரில் பிறை ஒன்றில் மோகனப் புன்னகை உதிர்த்தவாறு சமைக்கப்பட்டிருந்த காந்தி மகானின் அழகிய வெண்கலச் சிலை மீது அவர் விழிகள் பதிந்தன. மகாத்மா காந்தியை என்றுமே அவர் தேசாபிமானம் கொண்டு மதித்தவரில்லை. காந்தீயக் கொள்கைகளில் அவருக்கு விசேஷ ஈடுபாடோ நம்பிக்கையோ இருந்ததுமில்லை. என்றோ எப்போதோ ஒரு கண்காட்சி விழாவில் அந்தச் சிலையின் அழகிய வேலைப்பாடுகளில் உள்ளத்தைப் பறிகொடுத்து அவர் அதை வாங்கியிருந்தாரே தவிர, வேறு எந்தக் காரணமும் இல்லை. அன்று வரை அவர் அந்த மகானின் சிலையை ஒரு அழகிய காட்சிப் பொருளாகவே மதித்து அதன் கலைத் திறனைத்தான் கண்டுவந்தார்.

ஆனால் இன்றோ?.... வெற்று உருவாக, சிலையாக அது அவருக்குப் புலப்படவில்லை. அந்த அழகிய சிலையில் அவர் ஏதோ ஒன்றைக் கண்டார். அவரையும் அறியாமல் அவரது கரங்கள் அந்தரங்க சுத்தியுடன் வாழ்க்கையிலேயே முதல் முறையாகக் கூப்பிக் கொண்டு அந்த மகானுக்கு அஞ்சலி செலுத்தின. அவரது கண்களிலிருந்து நீர் முத்துக்கள் வழிந்தோடி அவர் நெஞ்சை ஈரமாக்கியபோது பொழுது புலர்ந்தது.

# பாடிப் பாருங்கள்

## தியாகராஜ ஸ்வாமிகள் திவ்யநாம கீர்த்தனைகள்

இவ்வாண்டு பாரத நாடு முழுவதும் தியாகராஜ ஸ்வாமிகளின் இருநூறாம் ஆண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இத்தருணத்தில் பேராசிரியர் எஸ். இராமநாதன், ஸ்வாமிகளின் திவ்யநாம கீர்த்தனைகள் என்ற நூலின் முதல் பாகத்தை வெளியிட்டிருப்பது பாராட்டுக்குரியது.

ஸ்ரீ எஸ். இராமநாதன் ஏற்கனவே ஸ்வாமிகளுடைய உத்ஸவ சம்பிரதாய கீர்த்தனங்களைச் சேகரித்துத் தொகுத்து வெளியிட்டுள்ளார். அண்மையில் பிரஹலாத பக்தி விஜயம் என்னும் ஒப்பற்ற இசை நாடக நூலை வெளியிட்டு அரிய தொண்டு செய்துள்ளார்.

ஸ்வாமிகளுடைய திவ்யநாம கீர்த்தனைகள் சுமார் 78 உள்ளன. இவற்றுள் ஒரு சிலவே வித்துவான்களால் கையாளப்பட்டு வந்துள்ளன. இப்பாடல்கள் எளிய இசையமைப்புக் கொண்டவை; மிகவும் கவர்ச்சியானவை. கரஹரப்ரியாவில் அமைந்துள்ள ''பாலவிராம'' என்று தொடங்கும் பாடலில் காட்டுக்குச் செல்லும் தருணத்தில் சீதை, பரதன், லக்ஷ்மணன், ஹனுமான் முதலியோரிடம் இராமபிரான் நடந்துகொண்ட விதம் உள்ளத்தை மிகவும் உருக்கும் வகையில் அமைந்துள்ளது. இராமாயணத்தையே சுருக்கமாகப் பாடியுள்ள ''விநயமுன'' என்ற கீர்த்தனை மிகவும் சுவையுடையது. இந்நூலில் பூபாளத்தில் உள்ள ''நீல ஜூலுவ'' என்று தொடங்கும் தசாவதாரக் கீர்த்தனையும், ''ஜயஜயஸ்ரீ ரகுராம'' என்று தொடங்கும் மங்களகைசிக ராகக் கீர்த்தனையும் குறிப்பிடத்தக்கன.

பேராசிரியர் இராமநாதன் இக்கீர்த்தனைகளில் உள்ள நயங்களையெல்லாம் தமது அரிய ஆராய்ச்சி முன்னுரையில் எழுதியிருப்பது பாராட்டத் தக்கது.

வித்துவான்களும், இசையாசிரியர்களும், மாணவர்களும் இந்நூலை வாங்கி இதில் உள்ள கீர்த்தனைகளைப் பாடிப் பயன்பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

முசிரி சுப்ரமண்ய அய்யர்

பதிப்பாசிரியர்: பேராசிரியர் எஸ். இராமநாதன்; வெளியிடுவோர்: கலைமகள் இசைக் கல்லூரி, 20-1, சைடோஜிக் தெரு, சென்னை - 5; விலை: ரூ. 2-50.

## கூரியர்

முன்பெல்லாம் ஒவ்வொரு நாடும் பிற நாட்டைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் தனித் தனியே இயங்க முடிந்தது. ஆனால் இப்பொழுது அப்படியில்லை. உலக நாடுகளின் சமூகக் கலாசாரப் பண்புகளை அறிமுகப்படுத்தும் தூதுவனாக — கூரியர் பத்திரிகையை யுனெஸ்கோ ஸ்தாபனத்தார் ஆறு ஐரோப்பிய மொழிகளிலும், அரபு, ஜப்பான், ஹிந்தி மொழிகளிலும் வெளியிட்டு வந்தார்கள். ஜூலை மாதம் முதல் தமிழிலும் வெளியிடத் தொடங்கியிருக்கிறார்கள்.

முதலிதழில் தென் ஆப்பிரிக்க இன ஒதுக்கல் கொள்கையைப் பற்றி முழு விவரங்கள் பல்வேறு கட்டுரைகள் மூலம் எடுத்து விளக்கப்பட்டிருக்கிறது. தென் ஆப்பிரிக்காவில் நீக்ரோக்களும் இந்தியர்களும் எவ்வளவு கொடுமைப்படுத்தப் படுகிறார்கள் என்று விண்டு விண்டு கூறுகிறது இவ்விதழ்.

யுனெஸ்கோ ஸ்தாபனத்துக்கு ஒரு நாட்டின் நிர்வாகத்திலோ அரசியலிலோ தலையிடும் உத்தேசமில்லை என்றாலும் இன ஒதுக்கல் கோட்பாடு, கல்வி, விஞ்ஞானம், கலாசாரம், செய்திப் பரிவர்த்தனை ஆகிய விஷயங்களில் விசேஷ விளைவுகளுக்குக் காரணமாக இருப்பதுடன், மனிதனின் மாண்பினையும் இழிவுபடுத்துவதாக இருக்கிறது என்பதால் சிரத்தை கொள்ள வேண்டியதாக இருக்கிறது.

நல்ல தமிழில் நல்ல தாளில் நன்றாக அச்சிட்டு வெளியிடுகிறார்கள். கூரியர் ஆண்டுச் சந்தா: ரூ. 10.50; தனிப் பிரதி: ரூ. 1.00

கிடைக்குமிடம்: தென்மொழிகள் புத்தக டிரஸ்ட், 441, பூந்தமல்லி ஹைரோடு, சென்னை – 10.

# B·I



# S. S. ரஜுலா

**சென்னையிலிருந்து**

**1967 அக்டோபர் 9 — 1967 அக்டோபர் 31**

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை–1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம்பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்.

**C. M. குட்டி**
புரொப்ரைட்டர் : குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை–1

**மெஸர்ஸ் கேரளா டிராவல்ஸ்**
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

**மெஸர்ஸ் சுபேதர் & சன்ஸ்**
66, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை-1

---

**நாகப்பட்டினத்திலிருந்து**

**1967 அக்டோபர் 10 — 1967 நவம்பர் 1**

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக்கொள்ளலாம்

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும் :

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை–1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

ஏஜண்டுகள் : பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

ஒருமுறை சென்னைக்கு வந்திருந்த காந்திஜியைப் பார்க்கத் தம் மூன்று வயதுக் குழந்தையுடன் வந்திருந்தார் ஒருவர். குழந்தையை மடிமீது அமர்த்திக்கொண்டு சிறிது நேரம் கொஞ்சிய காந்திஜி திடீரென அக்குழந்தையிடம் ''எனக்கு ஒண்ணு வேணும், கொடுப்பாயா?'' என்று கேட்டார். குழந்தையும் ''ஓ!'' என்றது உற்சாகத்துடன்.

## விடாக்கண்டர்!



காந்திஜி குழந்தையின் கையிலிருந்த இரு ஜோடி தங்க வளையல்களைப் பார்த்துக் கொண்டே, ''உன் வளையல்களைக் கழற்றிக் கொடுப்பாயா?'' என்று கேட்டார். குழந்தை தந்தையைப் பார்த்தது. தகப்பனார் திகைத்தாலும் சமாளித்துக்கொண்டு, ''கழற்றிக் கொடும்மா'' என்றார். காந்திஜி கழற்றிப் பார்த்தார். முடியவில்லை. மற்றவர்களும் முயன்றார்கள். அரை மணி நேரம் சென்றும் கழற்றமுடியவில்லை. சரி, காந்திஜி வளையலை இனி கேட்கமாட்டார் என மற்றவர்கள் நினைத்த நேரத்தில் காந்திஜி கூறினார்: ''கொண்டு வாருங்கள் கத்திரிக்கோலை'' என்று, வளையலை வெட்டி எடுக்க! கூடியிருந்தவர்கள் திகைத்தனர்.

ஆதாரம்: ''காந்தி நினைவு மாலை''

தகவல்: ச. ஸ்ரீதரன்

## சுலகீழ்

ஒருவர்: என் வியாபாரமே இப்பொழுது தலைகீழாக மாறி விட்டது.

மற்றவர்: ஏனுங்க அப்படி?

முதல்வர்: போன வருஷம் வைர வியாபாரம் செய்து கொண்டிருந்தேன், இப்போ ரவை வியாபாரம் நடக்குது.

## அங்குலம்

முன்பெல்லாம் மனிதனின் கட்டை விரலின் அகலம்தான் ஓர் அங்குலம் எனப்பட்டு வந்தது. ஆனால் மனிதனுக்கு மனிதன் கட்டை விரல் ஒரே அகலமாக இருப்பதில்லை.



அறுநூறு ஆண்டுகளுக்கு முன் ஆங்கில மன்னன் மூன்றாம் எட்வர்டு ஒரு நிர்ணய அளவை ஏற்படுத்தினான்; நீளவாக்கில் ஒன்றோடொன்று ஒட்டினாற்போல் மூன்று பார்லி தானியங்களை வைத்தால் எவ்வளவு நீளம் இருக்குமோ அதுதான் ஓர் அங்குலம் என்று.



## தெரியுமா?

1. உலகத்தின் மிகப் பெரிய ரயில் பிளாட்பாரம் எங்கேயுள்ளது? அதன் நீளம் என்ன?
2. டெலிவிஷன் கண்டு பிடித்தது யார்? எப்போது கண்டு பிடிக்கப் பட்டது?
3. காண்டாமிருகத்தின் முகத்தின் நடுவிலே முளைத்துள்ள கொம்பு எலும்பா, சதையா?
4. உலகிலேயே அதிக வார்த்தைகள் கொண்ட மொழி எது? அந்த வார்த்தைகள் எத்தனை? அதில் நடைமுறையில் உபயோகமாவது எவ்வளவு?
5. உலகில் மிகக் குறைந்த எழுத்துக்கள் உள்ள மொழி எது?

விடை: பின்புறம்

## குற்றமும் குறையும்

செய்ய வேண்டியதைச் செய்யாமல் விட்டுவிட்டால் அது குறை. செய்யக் கூடாததைச் செய்து விட்டால் அது குற்றம்.



உதாரணமாக, நம் விருந்தாளிக்குக் காப்பி கொடுக்க மறந்து விட்டால் அது குறை. அவர் மேல் காப்பியைக் கொட்டினால் அது குற்றம்.

— அனுபவ வேதம்

எழுதியவர் - கனல் மணி



## என். எஸ். கே. கேட்ட பிச்சை

ஒரு சமயம் என். எஸ். கே. வீட்டில் நடந்த விசேஷம் ஒன்றில் பிச்சையப்பாவின் நாதஸ்வர இன்னிசைக் கச்சேரி நடந்துகொண்டிருந்தது. வருகிறவர்களை வரவேற்று, அவர்களைக் கவனிப்பதில் ஈடுபட்டிருந்த என். எஸ். கே. யினால் கச்சேரியில் கவனம் செலுத்த முடியவில்லை. அவருக்கு நாதஸ்வரம் என்றால் மிகவும் பிடிக்கும். கச்சேரி முடியும் நேரம் நெருங்கியது. கச்சேரியை ரசிக்க முடியாமல் போன என். எஸ். கே. கச்சேரி மேடை முன் சென்று, ''பிச்சையப்பா! இன்னும் கொஞ்சம் பிச்சையப்பா!'' என்றார்.

## வேண்டாத செயல்.......!

ஜார்ஜியாவிலிருந்து வெளியாகும் டாஹ்லனிகா நஜ்ஜெட் என்ற பத்திரிகையின் ஆசிரியர் அத்தானின் தலைப்பில் நாள்தோறும் பின்வரும் செய்தியை வெளியிடுகிறார்.

''நஜ்ஜெட்டில் எந்தச் செய்தி வருவதை நீங்கள் விரும்பவில்லையோ, அதைத் தயவுசெய்து நடக்கும்படி விடாதீர்கள்!''

தீர்க அதற்குத் தக.



**மனைவி:** அடடா! ஆபீசிலிருந்து மயிலாப்பூருக்கு நடந்தேயா வந்துவிட்டீர்கள்?

**கணவன்:** இல்லை. ஒவ்வொரு ஸ்டாப்பிலும் நின்றுவிட்டுத்தான் வருகிறேன்.

**பல்சுவைப் பக்கம் - 2**

## நான்காவது தமிழ்

அரசியல் மேடைகளில் நடக்கும் சொற்பொழிவுகளையெல்லாம் கேட்டு ''நம் முன்னோர்கள் இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் என்று மூன்று வகைத் தமிழ் இருப்பதாக வரையறை செய்தார்கள். அந்த மூன்றுக்கும் மேல் நான்காவதாக 'வசைத் தமிழ்' என்ற ஒன்று இப்பொழுது வளர்ந்து வருகிறதே!'' என்று திரு. வி. க. அவர்கள் வேடிக்கையாகச் சொல்வார்கள். --வல்லவி



ஆதாரம்: கி. வா. ஜ.வின் ''வாழ்க்கைக் கூத்து''

1. வடஇந்தியாவில் உள்ளது கரக்பூர் ரயில் பிளாட்பாரம். அதன் நீளம் 2,733 அடி.
2. ஸ்காட்லாந்தைச் சேர்ந்த ஜான் லோகி பெயர்ட் என்ற 26 வயது இளைஞன், 1942ல் முதல் டெலிவிஷனை அமைத்தான்.

**விடை :**

3. எலும்பும் அல்ல; சதையும் அல்ல. காண்டா மிருகத்தின் உரோமங்களே கொம்பாகக் கெட்டிப்பட்டிருக்கின்றன.
4. ஆங்கில மொழி. மொத்தம் சுமார் எட்டு லட்சம் வார்த்தைகள். பொதுவாக வழக்கிலுள்ளவை சுமார் ஏழு அல்லது எட்டாயிரம் வார்த்தைகளே.
5. ஹவாய் மொழியில் பன்னிரண்டே எழுத்துக்கள்தாம்.

# E.I.D.-PARRY IN THE FIELD

*It is generally realised that the ultimate solution of the country's food problem lies in the proper use of balanced fertilisers and the E.I.D. Parry Group is proud of its record as the leader in the fertiliser field over the last 63 years. The E.I.D. Parry Group was the first to manufacture bone super, super-phosphate and compound fertilisers in the private sector. Factories are in full production at Ennore, Tadepalli and Ranipet, and mixing centres are operated throughout the States of Madras, Andhra, Mysore, Kerala, Maharashtra and Gujarat. The Group is also a partner in the vast project of Coromandel Fertilisers Ltd. at Visakhapatnam.*

*In 1963-64, the Group sold over a quarter million tonnes of fertilisers; it confidently hopes to double the sales in the next three years.*

*The E.I.D. Parry Group has the unique distinction of being called "The Fertiliser Co." in the rural areas and "The Confectionery Co." in the urban areas. The Group not only leads in the fertiliser and confectionery fields, but also in the manufacture and sale of sugar, pottery, sanitaryware, fungicides and a large number of other products.*

*Today, the E.I.D Parry Group, fondly known as "Parrys", is one of the larger companies in India, consisting of 9 subsidiary and associated concerns providing employment for more than 10,000 people.*

**E.I.D.-PARRY LTD.**

*179 years young and still growing.*



E.I.D.-PARRY LIMITED
Dare House, Madras 1

SUGAR • CONFECTIONERY
FERTILISERS • FUNGICIDES
POTTERY • SANITARYWARE
AGENCIES

FDS EID 512 A

சம்பகத்தூருக்கு மாற்றல் உத்தரவு.

அதைக் கேட்டதிலிருந்து ஒரு பதற்றம். அதற்கு நேரிடையான பரவசக் கிளர்வும் ஒருகணம் ஆட்கொள்கிறது.

அங்கே போவதா வேண்டாமா என்ற பிரச்னை. வாழ்வின் நுழை வாயில் இருட்டை உதறிவிட்டு மெல்ல மெல்ல ஒளியூடு வந்து வயிற்றுப்பாட்டுக்கு வழி தேடி, ஒரு வழியாகக் கண் விழித்தபோது, அந்தப் பழைய அநுபவக் கசப்புக்கள் சிறிது மறைந்து போனதென்னவோ உண்மைதான். இப்போது மாற்றல் என்றதும் ஒரு கணம் ஆவலும், அதே ஆவலின் எதிரே பதற்றமும் குறுக்கிட்டன.

விடுவாளோ? அல்லது அநாதையாகத் திரும்பப் போகும் உணர்வோடு குலுங்கக் குலுங்க அழுவாளா? அப்பாவையும், அம்மாவையும் எண்ணித் துக்கித்து அழுது, இன்று வெறும் நினைவின் துயரமாக மட்டும் இருக்கிறதே. அது சொந்த ஊரைக் கண்டதும் பீறிட்டுக் கிளம்புமோ?

அந்த நாட்கள்!

அப்பா, அம்மாவின் அரவணைப்பில் வாழ்ந்த நாட்கள் எத்தனை சுவாரசியம் மிகுந்தவை! வறுமையின் கொடுமையோ, ஏழைமையின் கலக்கமோ அற்ற சிட்டுப் பருவத்தின் தித்தித்த நாட்கள். வண்ண வண்ண உடைகளையும், வாய்க்கு ருசியான



இறுதியில் விமலா தனக்குத் தானே தலையைப் பலமாக அசைத்துச் சம்மதித்துக் கொண்டாள். அவள் மனமும் அமைதிக்கு நிலைக்களனுமியது. எத்தனையோ வருடங்களுக்குப்பின் அவள் சம்பகத்தூருக்கு உத்தியோக ரீதியில் செல்கிறாள். பிறந்த ஊருக்கு விடைகொடுத்து விட்டுப் பிழைக்க வெளியேறியவளை அந்த ஊரே கடைசியில் பிழைப்பு தந்து அழைக்கிறது.

அவள் ரயிலில் புறப்பட்டாள். அந்த ஊரைப் பார்க்கும் போது அவளால் மயிர்க்கூச்செறியாமலிருக்க முடியுமா? அந்த ஊரை அடைக்கும்போ, மண்ணில் கால் பதித்ததுமே மனம் பரவசப் புளகமுற நின்று

இன்பண்டங்களையும் அன்போடு வாங்கி வரும் அப்பா. கணமும் இணை பிரியாமல் காப்பாற்றிப் போற்றிய தாய். யாருமே இன்றில்லைதான். ஆனாலும் நினைவில் சுமமும் இரவில் ஒன்றி இனிப்பு கூட்டி நின்றன. அதை மனத் தாகம் ஏற்படும்போதெல்லாம் நினைவு கூட்டிச் சமனப்படுத்திக் கொள்ள முடிகிறது.

வாழ்வில் எத்தனை சாதாரண நிகழ்ச்சிகள் நினைவுப் பொக்கிஷங்களாகி விடுகின்றன. அவை யெல்லாம் மலர்க் குளிர்ச்சியும், மது போதையும் தந்து மனக் களிப்பில் குளிப்பது போல பாவனை புரியும். இதம் இதமான எத்தனை நிகழ்ச்சிகள்!

யாரோ ஒரு பையன் விஷமம் செய்யப் போக — ஏன் அன்று விஷமம் செய்த பையன் பாலுதான் — அவளை வகுப்பாசிரியர் பிரம்பால் சாட, அழுதுகொண்டே வந்த விமலாவைக் கண்ட அப்பா ஓடோடிப்போய் அந்த ஆசிரியையைக் கண்டபடி பேசிவிட்டு, விமலாவைச் சமாதானப்படுத்த கைநிறையச் சாக்லேட் வாங்கித் தந்தாரே...

அதே பாலுவுடைய தங்கை காஞ்சனா பணக்கார மமதையில் விமலாவின் கவுனை மட்டமானதென்று இகழ்ந்தபோது, அவள் துயர் தாளாமல், உடனே கடைக்குப் போய் உயர்ந்த ரக கவுன் வாங்கித் தந்தாரே...

அம்மாவின் அன்பு மட்டும் குறைந்ததா? அவளை யாராவது ஏதாவது சொன்னால் பொறுப்பாளா? பரிந்திருக்க விடுவாளா?




அழுவதற்குப் பார்ப்பாளா? அம்மா தான் எத்தனை அழகு? எத்தனை எளிமை! அவளோ இன்று வெறும் நினைவு. அந்த நிகழ்ச்சிகளெல்லாம் வெறும் நினைவுக் கலவைகள். ஆனாலும் கடந்து போன கால நிழலில் அப்பட்டமான உண்மைகளாக நின்று அந்தக் கணத்துக்குரிய ஓரே உணர்வை தனித் தன்மையாக விட்டுப் பார்க்கும்போது ஒவ்வொன்றும் ஒரு கலவை; ஒவ்வொன்றும் ஒரு போதை. காலத் தேய்வில் அவை கூர்மை இழந்து போயிருக்கலாம். ஆனால் அதன் தடமோ, வயமோ குன்றாமல் நிற்கிறது. எண்ணங்களின் முனைப்பில் மறக்க வேண்டிய சின்னஞ்சிறு நிகழ்ச்சிகள் கூட ஜீவ ரசங்கள் போலத் துள்ளித் துள்ளிக் குதிக்கின்றன. இன்று வாழ்க்கைக்குரிய பொறுப்போடும், வயிற்றுப்பாட்டுக்கு வேண்டிய பொறுமையோடும் இருக்கும்போதுகூட.

அப்பாவோடு பழகிய நண்பர் ஒருவருக்குத் தான் அவள் தன் வரவைத் தெரிவித்துக் கடிதம் எழுதியிருந்தாள். சம்பகத்தூர் இப்போது வெகுவாக மாறி ஒரு தொழில் நகரமாகி விட்டதென்பது அவள் கேள்விப்பட்டது தான். ஆனால் இப்படி அடையாளம் தெரியாத அளவு அது மாறிப் போயிருக்குமென அவள் நினைத்ததில்லை. அதனால்தானோ என்னவோ அது பழைய ஊராகத் தென்படாமல் புதிதாகத் தோற்றமளித்தது. எந்த உணர்வுக் கிளர்ச்சியை எதிர்பார்த்து அவள் ஏங்கினாளோ, அது மனதில் ஜனிக்கவே இல்லை. அதுவே ஒருவிதத்தில் வெற்றியாகவும், ஒருவிதத்தில் தோல்வியாகவும் இருந்தது.

ஸ்டேஷனுக்கு வந்து அவளை அழைத்துப் போக வந்த சிவசாமி அன்போடும் பரிவோடும் அவள் நலம் விசாரித்தபோது அவள் ஊரின் மாற்றத்திலேயே கருத்தாக இருந்தாள்.

''ஓ! விமலா! நீ ஊரை விட்டுப் போய் ஆறு வருஷங்கள் ஆகிறதில்லையா? அதுதான் நீ அசந்துவிட்டாய். சம்பகத்தூர் முன்போல் இல்லையம்மா. பெரிய தொழில் நகரமாகி விட்டதம்மா. வா, போகலாம். டாக்ஸியிலே போறபோதே தெரியும்...''

அவர் சொன்னது உண்மைதான். முன்பெல்லாம் மூலைக்கு மூலை மரங்களடர்ந்த தோப்புக்கள் இருக்கும். அங்கெல்லாம் இப்போது பிரம்மாண்டமான கட்டிடங்கள். திடீரென அங்கே பிரபலமடைந்த தொழிற்சாலையும், கல்லூரியும், விண்ணளாவி நின்றன. தொழிற் காலனிகள், அலுவலகக் கட்

டிடங்கள், டூரிஸ்ட் ஹோட்டல், சினிமாக் கொட்டகைகள், பூங்காக்கள், அகலமான சாலைகள், வசதியான இல்லங்கள் எல்லாமே சம்பகத்தூருக்குப் புதிய உருத் தந்து, அலங்காரப்படுத்தின. பெருமிதம் மின்ன விமலா சிவசாமியைப் பார்த்து, ''நான் வேலை பார்க்க வேண்டிய 'பாரதி பாலி டெக்னிக்' எங்கே உள்ளது?'' என்று கேட்டாள்.

''முன்பு நீ உன் பெற்றோருடன் வசித்த பேட்டைத் தெருவின் பின்னால் உள்ளது. இன்னும் சொல்லப் போனால் உங்கள் தோப்பைக் கவர்ந்தவன், அதை பாலி டெக்னிக் கட்டிடமாக மாற்றிவிட்டான்.''

ஒரு முறை இதயம் விம்மி எழுந்து தாழ்ந்தது விமலாவுக்கு.

அவள் குடியிருக்க வேண்டிய நிழலிலேயே, அவள் வயிற்றுப் பாட்டுக்கான வேலை செய்யப் போகிறாள். ''அம்மா, அப்பா'' என்று அவள் உள் மனம் பொருமித் துடித்தது. கண்களில் நீர் முட்டிக் கொண்டு வந்தது. எத்தனையோ பிரயாசைப்பட்டும் அவளைக் காட்டிக் கொடுத்து விட்டது அது.

''விமலா....'' சிவசாமியின் குரலில் நயமான கனிவு ஊடாடியது. வயதானவர்களுக்கே உரிய சொற்களோடு அவளுக்கு ஆறுதல் நல்க முயன்றார்.

சின்னஞ் சிறு வீட்டெதிரே நின்றது வாடகைக் கார். சிவசாமியைத் தடுத்து விட்டு விமலா பணத்தைக் கொடுத்தாள். வறுமையே போர்வையானாற்போல் ஒளி மங்கிய வீட்டில் சிவசாமியின் மனைவி செல்லம் இடம் பொருள் ஏவல் உணர்ந்த புன்னகையோடு வரவேற்றாள். அந்த வறுமையைப் பங்கிட்டுக் கொள்ள இனி அவளும் ஒருத்தியாக வந்திருக்கிறாளா? இல்லை, அவள்தான் சம்பாதிக்கப் போகிறாளே!

பகலுணவுக்குப் பின் விமலா, சிவசாமியுடனும், செல்லத்துடனும் பேசிக்கொண்டிருந்தாள். கடந்த காலத்தில் அவளது பெற்றோர்கள் வாழ்ந்த நிலையும், பேச்சில் குறுக்கிட்டது.

'' 'என்றாவது முன்னேறிவிடுவேன். என் குழந்தையின் பிற்காலத்தில் வறுமையின் நிழல்கூடப் படவிடமாட்டேன்' என்று சொல்வாரே ராமநாதன்? இன்று நீ இத்தனை கஷ்டப்படுவதை அவர் இருந்தால் எப்படித்தான் சகிப்பாரோ?'' பெருமூச்சோடு நண்பரை நினைவுகூர்ந்தார் சிவசாமி.

''உம்! பழங்கதை எல்லாம் எதற்கு? நாம் என்னென்னவோ நெனைக்கத்தான் எதையும் செய்யறோம். விதின்னு ஒண்ணு இல்லையா அப்படி நடந்துடறதுக்கு?'' என்றாள் செல்லம்.

வயதாகி விட்டால் இப்படி ஒரு விரக்தியை ஏற்று வாழ்ந்து விட முடிகிறது. ஆனால் விமலாவின் இளமை ரத்தம் கனன்று கொதித்தது, எண்ணி மருகியது.

''இப்போது ராமநாதன் வாழ்ந்த வீடும், அதை அடுத்திருந்த தோப்பும் 'பாலிடெக்னிக்' ஆகிவிட்டது. அமோகமாகத்தான் வாழுறது அந்தக் குடும்பம். ராஜாராமன் போன வருஷம் போய்விட்டான். பெண் காஞ்சனாவைப் பெரிய இடத்தில் கொடுத்து விட்டான். பையன் பாலுவும் தலையெடுத்து சிறப்பாக நிர்வாகம் நடத்தறான்'' என்றார்.

''நல்லவர்களுக்குத்தான் இது காலமில்லை. அதுகள் பிழைக்கிறதுக்கு என்ன?'' என்று முத்தாய்ப்பு இட்டவாறே முந்தானையை விரித்துப் படுத்தாள் செல்லம்.

அடுத்த நாள் விமலா வேலையின் பொறுப்பை ஏற்கப் புறப்பட்டாள். அங்கேயே இல்லாமல் இந்த மாற்றலை ஏன் ஏற்றுக் கொண்டோம் என்று தன்னைத்தானே நொந்தவளாய், பிறந்த மண்ணின் வளர்ந்த சூழ்நிலைகளையெல்லாம் பார்த்தவாறே பாலி டெக்னிக் வாசலை அடைந்தாள். அழகான உயர்ந்த இரும்பு கேட். அடுத்து வனமான தோட்டம். வளைந்த இரு பாதைகள். அதை அடுத்து பிரும்மாண்டமான ஒரு பெரிய கட்டிடம். முன்பு தென்னை மரங்கள் அடர்ந்திருந்த இடம் இப்போது கல்விச் சாலை. அவள் வாழ்ந்த வீடுதான். அழகான தோட்டம். மனத்தில் இனம் புரியாத பொருமல் உருவெடுத்தது. கடன் என்ற பெயரில் தந்த ஒரு சிறு தொகைக்காக, இத்தனையையும் வன்முறையில் கவர்ந்து, அதைத் தன் பெயரும் புகழும் பெருகக் காரணமாக ஆக்கிக் கொண்ட ராஜாராமன், இன்று இல்லை. அவர் பெயர் நிலைக்க இந்தக் கல்விச் சாலை உள்ளது. ஆனால் அந்த மண்ணின் சொந்தக்காரனின் பெயர் மண்ணோடு மண்ணாகி மறைந்து விட்டது.

''என்றாவது ஒரு நாள் அடைந்தே தீருவேன்'' என்று வெறிக் கூச்சலோடு அப்பாவின் கண்களில் ஒளிர்ந்த அந்த நம்பிக்கை ஒளியை மெய்யாகக் காணாமலே போய் விட்டார் அப்பா.

வாழ்வின் தோல்விக்கெல்லாம் காரணமானவர்களிடமே வயிற்றுக்குக் கையேந்தி, தான் குடியிருக்க வேண்டிய நிழலிலேயே உழைத்துப் பிழைக்க வந்த பின் பழைமையான பகையையும் பாராட்டுவதில் அர்த்தமில்லைதான். என்றாலும் தோற்றுத் தூர ஓடி, தோல்வி தந்த களைப்பில், வெறுப்பில், வாழ்வையே சித்திரவதையாக ஏற்க நேர்ந்த கசப்பில் அவள் துடிதுடித்து வெந்தாள். நிராசையோடு மடிந்த தாய் தந்தையரின் ஆத்ம திருப்திக்காகக்கூட தன்னால் எதுவும் செய்ய முடியவில்லையே என்ற ஏமாற்றமே பெரு நெருப்பாக மனத்துள் மூண்டிருந்தது.

வேலையை ஒப்புக் கொண்டாள் விமலா. அநேகமாக அவளை அறிந்தவர்கள் யாருமே அங்கு இல்லை. அது ஒருவிதத்தில் ஆறுதலாகவும், பிறரிடம் கூறி ஆற முடியாத வருத்தமாகவும் மாறி மாறித் தோன்றிக்கொண்டிருந்தது.

மாலை நேரம். ஓரிரு வகுப்பை நடத்தினாலும் மனத்தில் களைப்பு மண்டிவிட்டது. ஆசிரியர் அறையில் பிறருடன் அளவளாவும் விருப்பமில்லாமல் அமர்ந்திருந்தாள் விமலா.

''உங்களை 'பாஸ்' அழைக்கிறார்.'' சக ஆசிரியை அழைத்துப் போய் ஓர் அறையைக் காட்டிவிட்டு விலகினாள்.

முதலடி வைக்கும்போதே அவள் பார்வையில் பாலுவின் உரு சிக்கியது. என்னதான் வளர்ந்து வாலிபக் களையோடு மின்னினாலும்

# வேலை செய்யும் காலமெல்லாம் அவன் சேமித்திருந்தான்... இன்று அவன் கவலையற்ற மனிதன்.




தலைமை ஆபீஸ்: கல்கத்தா

பணம் சேமிக்கவும், கரண்ட், ஸேவிங்ஸ், பிக்ஸெட்—ரெக்கரிங் டிபாஸிட்டுகள் ஆகிய கணக்குகள் வைத்துக்கொள்ளவுமான எல்லா வசதிகளையும் வழங்குகிறோம்.

ASP/UCO-13/66

# அக்கோப்ரூ:ப்

## பவுடர்




**உபயோகிக்கச் சுலபமானது,**
**எடுத்துச் செல்ல**
**வசதியானது**

சிறந்த ஸிமெண்ட்-வாட்டர்ப்ரூஃபிங் தயாரிப்பான அக்கோப்ரூஃப் பவுடர், உபயோகிப்பதற்கும், இடத்திற்கு இடம் எடுத்துச்செல்லவும் வசதியாக இருக்கும்படி பேக் செய்யப்பட்டுள்ளது. 1 கிலோ பெட்டியானாலும், 20 கிலோ ட்ரம்மானாலும், வசதியாக, சேதமில்லாமல் இடத்திற்கு இடம் எடுத்துச் செல்லலாம்.

அக்கோப்ரூஃப் பவுடர் ஸிமெண்டுடன் இரண்டறக் கலந்து ஸிமெண்டை முற்றிலும் நீர் கசியாததாக்குகிறது. ஸிமெண்ட் காரை அல்லது கான்க்ரீட்டுடன் அக்கோப்ரூஃப் பவுடர் கலப்பதற்கு குறைந்த அளவு தண்ணீரே தேவைப்படுகிறது. அக்கோப்ரூஃப் பவுடரின் விசேஷம் என்னவென்றால், அது ஸிமெண்டின் உறுதி, இறுகும் தன்மை முதலிய குணங்களைப் பாதிப்பதில்லை.

1 கிலோ கிராம் பெட்டிகளிலும், 20 கிலோ கிராம் ட்ரம்களிலும் இந்த விலாசத்தில் கிடைக்கும்:

**தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்**

ஸிமெண்ட் ஹவுஸ், 121, க்வீன்ஸ் ரோடு,
பம்பாய்-1

அகமதாபாத் . பெங்களூர் . கல்கத்தா . கோயம்புத்தூர் . புது டெல்லி . இந்தூர் . கான்பூர் மதராஸ் . பாட்னா . செகந்திராபாத் கிளைகளிலும் கிடைக்கும்.



ஸிமெண்டை நீர் கசியாததாக்குவதற்கான பொருள்களுக்கென விதிக்கப் பட்டிருக்கும் இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் ஐ எஸ்: 2645-1964 க்கு ஏற்ப அக்கோப்ரூஃப் தயாரிக்கப் படுகிறது.

## அக்கோப்ரூ:ப்

**ஏஸிஸி அளிக்கும்**
**ஸிமெண்ட்-வாட்டர்ப்ரூஃபிங்**
**தயாரிப்பு**

தி அஸோஸியேடெட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

CMI-5707

சூட்டையும், கோட்டையும் மாட்டிக்கொண்டிருந்தாலும், அவனுக்கு அடையாளம் தெரியாதா என்ன?

சாதாரணமாக நிமிர்ந்த அவன் பார்வையில் அவளைக் கண்டதும் ஒரு மின்வெட்டான அதிர்வு. முகத்தின் திகைப்பில் மெல்லப் புன்னகை பரவ, நிற்பவளைப் பார்த்து. ''நீ....நீங்களா? உட்காருங்கள். என்ன எதிர்பாராத சந்திப்பு!'' என்றான்.

அவள் உட்கார்ந்தவாறே சிரிக்க முயன்றாள். ஆனால் இதழ்களில் விம்மலின் துடிப்பே சிதறியது.

''என்ன அதிசயமான சந்திப்பு! உங்கள் பெயரைப் பார்த்தபோதுகூட நீங்கள் என்று நினைக்கவில்லை.''

அவள் மறுமொழி கூற முயலவில்லை.

''உங்களைப் பற்றி எங்கெல்லாமோ விசாரித்தேன். ஒரு தகவலும் கிடைக்கவில்லை. உங்கள் அப்பாவின் நண்பரான மிஸ்டர் சிவசாமியைக்கூட இரண்டொரு தரம் கேட்டேன். தெரியாதென்றுவிட்டார்.''

குழந்தையாக இருந்தபோது தான் செய்த தவற்றை ஒப்புக்கொள்ளாமல், பிறர் மீது ஏற்றி அடிவாங்கி வைத்துவிட்டு, வகுப்பில் சாதுபோல் அமர்ந்திருந்த பாலுவா இவன்? பேச்சில் என்ன கனிவு! செய்கையில் எத்தனை நிதானம்! ஆனால் எல்லாமே ஒரு வேஷமோ? அவளின் உடைமையைக் கவர்ந்து கொண்டமன உறுத்தலை மறைக்கும் சாமர்த்தியமோ?

''உங்களைப் பார்த்ததில் நான் சந்தோஷமடைகிறேன். விடாமுயற்சியோடு கல்வி கற்று அநுபவ வாழ்வுக்கும் தயாராகிவிட்டீர்கள். உங்கள் உழைப்பையும், உறுதியான மனதையும் கண்டு ஆச்சரியப்படுகிறேன். எல்லாவற்றையும் விட, நான் தேட முயன்ற தோல்விக்கெல்லாம் சிகரமாக நீங்கள் இங்கேயே வந்துவிட்டீர்கள்!''

''நன்றி. இங்கே வர நேர்ந்த விதிக்கு வருந்தி நொந்தவாறே அடியெடுத்து வந்திருக்கிறேன், நான். நீங்கள் சந்தோஷப்படுவதற்கு இதில் என்ன இருக்கிறதென்றே எனக்குப் புரியவில்லை.''

''உங்களுக்குத் தெரியாது விமலா. இந்த இரண்டு வருடங்களாக உங்களைத் தேடுவதில் நான் காட்டும் சிரத்தையை வேறெதிலும் வைத்ததில்லை...''

''ஏன்? உங்கள் வெற்றி மமதையை என்னிடம் கூறி மகிழவா? என் தோல்வியைச் சீண்டி, என்னையும் அணு அணுவாகச் சாகவிடவா?'' — ஆத்திரம் படபடவென சொற்களைச் சிந்தியது. அவன் மனத்தைக் கொஞ்சமாவது புண்படுத்திவிட்ட குரூரத் திருப்தி எஞ்சியது.

அவன் முகத்தில் இலேசான வருத்தம் படர்ந்தது. ''மிகவும் வருந்துகிறேன் விமலா. உங்கள் பெற்றோர்கள் தோல்வியால், துன்பத்தால் வாடி நொந்ததற்கெல்லாம் காரணம் என் அப்பாதான் என்பதை நன்றாக அறிவேன். ஆனால் அதெல்லாம் நடந்துபோன புண்கள் என்று எண்ணி மனத்தை ஆற்றிக் கொள்ள வேண்டும்...''

''அது சுலபம் என்று தோன்றவில்லை. எனது ஒவ்வொரு கண வளர்ச்சியும் இந்த நினைவிலேயே வளர்ந்தது...''

### அதுவும் ஆமோதித்தது!

அண்மையில், காரைக்காலில் நடந்த தேர்தல் பொதுக்கூட்டத்தில் புதுவை முன்னாள் முதல் மந்திரி குபேர் பேசிக் கொண்டிருந்தார். அப்போது அவர் சொற்பொழிவைப் பிடிக்காத சிலர் கழுதையை மைக்கின் பின்னால் விரட்டிக் கத்தச் செய்தார்கள். கழுதையின் இனிமையான குரல் மைக்கில் மோதி, ஒலிபெருக்கி வழியாக ஒலித்தது!

கழுதை கத்தியதில் பேச்சை நிறுத்திய குபேர், அது நின்றவுடன், ''கேட்டீங்களா, நான் பேசியதை இந்தக் கழுதைகூட ஆமோதிக்கிறது!'' என்றார்.

''வெரி சாரி விமலா...அந்தப் புண்ணைப் போக்கிவிடலாம் என்ற எண்ணத்தில்தான் நான் ஒரு முடிவுக்கு வந்தேன்...''

''அது எந்த முடிவானாலும் எங்கள் இழந்த கௌரவத்தை மீட்டுத் தராதென்பது நிச்சயம்.''

''அது தவறு விமலா. என் முடிவை நீங்கள் ஏற்கும் விதத்தால் உங்கள் கௌரவமும் மீட்கப்படும் என்பதில் ஐயமில்லை.''

''நான் வருகிறேன்'' அவள் எழுந்து கொண்டாள். அப்புறம் தன் முடிவை மாற்றிக் கொண்டவளாய், ''மன்னித்து விடுங்கள். நீங்கள் கூப்பிட்டனுப்பி வந்தேன். அலுவல் விஷயமாகவோ, புதிதாகச் சேர்ந்ததால் ஏதேனும் கூறுவதற்கோ அழைத்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். உணர்ச்சிப் பெருக்கில் அதை மறந்து எழுந்துவிட்டேன்...'' என்றாள்.

''பரவாயில்லை விமலா. ஒரு அறிமுகத்துக்காகத்தான் அழைத்தேன். அதுவும் நல்லதாயிற்று. நான் யாரைத் தேடி அழைத்தேனோ அவராகவே நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்று காண மகிழ்ச்சி. இன்னும் ஒரு வாரத்தில் நம் பாலிடெக்னிக்கின் ஆடிட்டோரியம் திறந்து வைக்க ஏற்பாடுகள் நடக்கின்றன. அதற்கு மாணவிகளின் கலை நிகழ்ச்சிகள் உண்டு. இது விஷயங்கள் உங்கள்வரை எட்டியிருக்கும் என்று கருதுகிறேன்...''

''ஆம்! நிகழ்ச்சிகளுக்கு என்னாலான ஒத்துழைப்பைத் தருவேன்.''

''இத்தனையும் ஏன் சொல்கிறேன் என்றால்—....அதன் பெயர் 'ராமநாதன் ஆடிட்டோரியம்'. திறப்பு விழாவின்போது ராமநாதன் அவர்களின் படம் ஒன்றையும் நான் திறந்து வைப்பதாக இருக்கிறேன்.''

விமலா திக்பிரமையோடு நிமிர்ந்தாள். அதிர்வு மின்வெட்டாகப் பிரதிபலிக்க அவள் ஊமையாக நின்றாள்.

''நீங்கள் போகலாம்'' என்று விடை கொடுத்தான் பாலு.

அவள் உணர்வில் ஏதோ ஒரு குலுக்கல். அது மகிழ்வா, இன்பமா? துயரமா, துன்

பமா? எதுவுமே புரியாத குழப்பம். அப்பா! உங்கள் இடம் உங்கள் பெயரில் உருவாகப் போகிறது. உங்கள் பெயர் காலம் உள்ள வரை நிலைக்கப் போகிறது அப்பா! உங்கள் கனவு நினைவாகும் நாள் வருகிறது. உயிரோடு, உடலோடு உங்களுக்கு உரிமையாகா விட்டாலும் உங்கள் பெயரோடு நிலைக்கப் போகிறது!

ஆனால்...

இதனால் அவளுக்கு என்ன பலன்? பாலுவும், அவன் குடும்பத்தினரும் பிராயச் சித்தம் செய்து கொண்டதாக நிம்மதி அடையலாம். அதன் மூலம் அவர்களின் கௌரவத்தையும் புகழையும் மேலும் ஒரு படி உயர்த்திக் கொள்வார்கள். விமலா என்னவோ கூனிக் குறுகித்தானே இதே பிழைப்பில் நிலைத்திருக்க வேண்டும்?

நடந்ததை யெல்லாம் அவள் சிவசாமியிடம் கூறியபோது அவர் வியப்படைந்தார். பாலு இரண்டொரு முறை விமலாவைப் பற்றிய தகவலைத் தன்னிடம் கேட்டதாகவும் ஒப்புக் கொண்டார். அவனால் விமலாவுக்கு ஏதேனும் கெடுதல் நேருமோ என்று பயந்துதான் தெரியாதென்று மறுத்ததாகக் கூறினார்.

அந்தக் கொட்டகையில் ராமநாதன் ஆடிட்டோரியம் என்ற பெயர் நீல ஒளிக் கோடுகளாய்ப் பிரகாசித்தது. ராமநாதனின் படத் திறப்பு விழாவை பாலு சிறப்பாக நடத்தினான்! விமலாவினால் நம்ப முடியவில்லை என்றாலும் கண்ணெதிரே நடக்கிறது. படத்தில் சிரிக்கும் தோற்றத்தில் இருக்கும் அப்பாவின் கோலம் அவளைக் கண்டுகிறது.

என்றோ அந்தக் கண்களில் கண்டிருந்த நம்பிக்கை ஒளி இன்று பரிபூரண நிறைவெய்தியது போல் சாந்தமாக இருந்தது. அவள் கண்கள் குபுகுபுவெனப் பெருகிக் குமிழியிடுவதுபோல் படபடத்துப் பனித்தன. மனத்தில் உறுத்தி நின்ற முட்களை யெல்லாம் வெள்ளம் இழுத்துச் செல்வது போல் சரிந்தோடி விட்டன. நெஞ்சினிடையே இதுவரை வைராக்கியப்படுத்தப்பட்டிருந்த கடினமான ஒன்று இளகி மிருதுவாகி விட்டது போல் தோன்றியது. இனி எந்த வடிவிலும் அதை உருமாற்றித் திருப்பலாம் போன்ற நெகிழ்வில் உருகி நின்றது.

அவள் மனத்தின் கறை துடைக்கப்பட்டாயிற்று. இனி, புதிய பலம் வந்தாற் போல் தோன்றியது. தனக்காக உழைப்பது மட்டுமே இனி பொறுப்பு என்றபோது நிறைவு ஏற்பட்டது.

''விமலா!''

விமலா சுற்று முற்றும் பார்த்தாள். யாரையுமே காணவில்லை. நிகழ்ச்சி முடிந்த பின்னும் அவன் உட்கார்ந்திருக்கிறான். அந்த வெட்கத்தோடு ஏதோ ஒரு பரவசமும் ஆட்கொண்டாற்போல் அவள் மெல்ல எழுந்து நடந்தாள்.

''உங்களோடு கொஞ்சம் பேச வேண்டும்''

''பேசலாமே!'' உவப்பான நிலையில் அவன் கூறினான். ''நான் உங்களுக்கு நன்றி கூறவேண்டுமா?''

''இல்லை. இது என் மனச்சாட்சியின் ஆணைப்படி செய்த செயல். எனக்கு இதில் ஏற்பட்ட திருப்தி உங்களுக்கும் ஏற்பட்டிருக்கலாம்.... ஆனால்...''

இருளில் மூலைக்கொன்றாக எரிந்த விளக்குகளைப் பார்த்தவாறே அவள் கூறினாள். ''ஆனால் என்ன? உங்கள் இந்தச் செயலை என் உயிருள்ள மட்டும் வாழ்த்துவேன்.''

''உங்கள் தோல்விக்கு இது வெற்றியாகுமா?''

''என்ன சொல்கிறீர்கள்?''

''உங்களைப் பற்றிய தகவலைக் கேட்டுக் கொண்டிருந்தேன் என்று சொல்லவில்லையா? எந்தச் சொத்தை என் அப்பா துராக்கிரகமாகப் பறித்தாரோ அதையும் அவர் சொத்தையும் கூட உங்களுக்கே உரிமையாக்கிவிட வேண்டும் என்பது என் அவா. இதில் என் சுயநலமும் கலக்காமல் இல்லை விமலா.... நான் திருமணம் செய்து கொள்ளாமல் காத்திருப்பதும் கூட இதற்காகத்தான்...''

சட்டென்று அதிர்வில் வாய் மூடி நின்றவள் தன்னைத் தேற்றிக்கொள்ள ஒருசில விநாடிகள் ஆயிற்று. ''இந்த முடிவு வேண்டாம். உங்கள் அநுதாபம் உங்கள் வாழ்வையே சிறையாக்கிவிடக் கூடாது...''

''இது அநுதாபம் இல்லை விமலா. இப்படித்தான் நான் என்னைத் துயரத்திலிருந்தும் சிறை மீட்டுக் கொள்ள முடியும் என்று நினைக்கிறேன்.''

விமலாவுக்கு இது கனவா, நனவா என்று ஐயம் ஏற்பட்டது. அவள் முன் வானில் ஆயிரக் கணக்கான நட்சத்திரங்கள் கண் சிமிட்டி நகைத்தன. வட்ட நிலா அவள் பக்கம் நகரும் பாவனை காட்டியது. உலகமே அந்த க்ஷணத்தில் ஆனந்த விம்மிதத்தில் பூத்து நிற்பது போல் பிரமையூட்டியது.

''இதில் யோசிப்பதற்கு இத்தனை தடங்கல்களா இருக்கின்றன விமலா?''

''உங்கள் நலன் கருதித்தான்!''

''இந்த இணைப்பில் அது பெருக முடியும் விமலா. உங்கள் தோல்விகளை யெல்லாம் மறந்து விடுங்கள். இந்த வெற்றியில் அந்தத் தோல்வியை ஜெயித்து விட்டதாக நினைத்துக்கொள்ளுங்கள்.''

காரருகே இருவரும் நெருங்கிவிட்டார்கள்.

அவள் நிதானமாகக் கூறினாள். ''அப்படியானால் இனி 'நீ' என்றே அழையுங்கள்.''

''விமலா!'' அவன் குரல் பரவசத்தில் மிதந்தது. ''காரில் ஏறு. நானே டிராப் பண்ணிவிடறேன்.''

''வேண்டாம். முடிவுகள் மங்களத்தில் ஏற்கப்படட்டும். அதுவரை நான் பிறர் பேச இடம் கொடுக்க மாட்டேன்.''

''வெரிகுட்! அந்த முடிவைச் சீக்கிரமே வரவேற்றுவிடுவோமே!'' என்ற பாலுவின் முகத்தில் தெறித்த மகிழ்வில் யுவ கர்வமும், இளமைக் கவர்ச்சியும் மின்னின.

விமலா எப்போதும் போலத்தான் நடக்க முயன்றாள். ஆனாலும் அவள் கன்னி மனம் வெற்றி தோல்விகளுக்கு அப்பால் குதி போட்டுக் கொண்டிருந்தது.

இப்படி ஒரு வெற்றியா அவளுக்கு?




**சாக்ளா போற்றுதும்!**
**சீதையின் சோதனை**
**குட்டிக்கதைக்கோரு ஷொட்டு**
**அரசியல்வாதி ரௌடியா?**
**கணபதி: சந்தேக விளக்கம்**

தமது ராஜிநாமாவின் மூலம் ஸ்ரீ சாக்ளா பாரதத்தின் திராணியற்ற மத்திய சர்க்காருக்கு அதிர்ச்சி வைத்தியம் செய்திருக்கிறார்; மக்களின் மதிப்பில் ஓங்கியிருக்கிறார்.

சர்க்காரின் கல்விக் கொள்கை தேசத்தின் ஐக்கியத்துக்குக் குழிபறிக்கிறது என்று சாக்ளா கருதுவது சரியல்ல என்கிறார் பிரதமர். இதை யாரும் ஒப்ப முடியாது. முன்னாள் நீதிபதி சாக்ளா, முன்னாள் கல்வி நிபுணர் டாக்டர் ராதாகிருஷ்ணன், இந்தியாவின் தலைமைச் சிந்தனையாளர் ராஜாஜி இவர்களின் கருத்தைத்தான் மக்கள் துணை கொள்ள முடியும்; ஹிந்தி யதேச்சாதிகாரிகளுக்கு அடிபணிந்துவிட்ட பிரதமருக்கு அல்ல.

பெங்களூர் வி. டி. ஸ்ரீநிவாஸன்

கல்கி 10–9–67 இதழில் ராஜாஜியின் ''பூரணஹுதி...''யில் சீதா தேவி குறித்து சோகம் இழைந்தோடுகிறது. சீதையை இரண்டாம், மூன்றும் முறை ராமபிரான் பரீட்சிப்பதாக உத்தர காண்டத்திலேயே காண்கிறது. வால்மீகி ராமாயணம், ராம பட்டாபிஷேக பல கருதியுடன் முடிந்துவிடுகிறது என்றே பல ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். பிற்பட்ட உத்தரகாண்டம் வால்மீகி எழுதியதா என்பது கேள்வி.

இராவண வதத்தையடுத்து நடந்த முதல் அக்கினிப் பரீட்சை பற்றி ஒரு வார்த்தை: பிறனிடம் தங்கிய பெண்ணைப் பற்றிய ஆணின் சந்தேகங்களுக்கு உச்சநிலையே அது. பகவானும் மனிதனாகப் பிறந்தால் மனிதனின் ஒவ்வொரு உணர்வையும் அனுபவித்தேயாக வேண்டும் என்பதால் ராமனை இப்படிச் சித்திரித்திருப்பதே ராமாயணத்தின் வெற்றி எனலாம். மேலும், தண்டகாரண்யத்தில் லக்ஷ்மணனிடம் சீதை சொன்ன தீய சொற்களாகிய பாப கர்மாவை அவள் எரித்த பின்னரே பகவானிடம் சேர முடியும் என்பதாலேயே தீக்குளிக்கிறாள்.

சென்னை எஸ். சேதுராம கிருஷ்ணன்

கல்கியில் சமீப காலமாக பல தேசக் குட்டிக் கதைகள் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன. யாவும் சிறப்பாக உள்ளன. இம்மாதிரியே தொடர்ந்து எல்லா நாட்டுக் கதைகளையும் பிரசுரித்து வரக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அருப்புக்கோட்டை சிறுவன் பிரகாஷ்

சென்ற இதழ் கல்கி செப். 3, 1967ல் நடிகர் 'சோ' எழுதி வரும் ''யாரோ இவர் யாரோ''வில் ஓர் இடத்தில் ''...ரௌடிங்களைப் பார்த்தா அரசியல்வாதி மாதிரி இருக்கிறாங்க — அரசியல் வாதிகளைப் பார்த்தா ரௌடிங்க மாதிரி இருக்கிறாங்க'' என்று குறிப்பிடுகிறார். அரசியல் தலைவர்களை இப்படித் தாக்கலாமா? பெரும்பாலான தலைவர்கள் மக்களால் சுய விருப்பப்படி தேர்ந்தெடுக்கப்பட்டவர்களேயல்லவா?

ஆமதாபாத் பி. லோகநாதன்

திரு ரா. கணபதி யவர்கள் சென்ற இதழில் வழங்கியுள்ள ''கணபதி'' கட்டுரை, அலைக்கு மேல் அலையாக அடித்து வரும் கடலைப் போல் புது விஷயங்களை அலையடித்து எம்மவரை ஆனந்தக் கடலில் திக்குமுக்காடச் செய்தது. மேலும் மூன்று விஷயங்களில் விளக்கக் குறிப்புக்கோருகிறேன்:

(1) காவிரியைத் தமிழ் நாட்டில் கணேசர் பாயவைத்த வரலாறு.

(2) நான்காம் பிறை பார்த்தலாகாதென கணேசர் சபித்தமை.

(3) திருவிளையாடற் புராணத்தில் சிவனார் பிள்ளையார் மீது இட்ட சாபம் சிவனார்மீதே திரும்பியது.

சேத்துப்பட்டு க. இராமச்சந்திரன்

1. சூரபன்மனுக்கு அஞ்சி இந்திரன் மூங்கில் உருவில் சீர்காழிக்கருகே சிவபூஜை செய்து வருகையில் அங்கு வறட்சி தோன்றவே விநாயகரைப் பிரார்த்தித்தான். இச்சமயத்தில் சிவபெருமானிடமிருந்து காவிரியைத் தமது கமண்டலத்தில் பெற்று ஸஹ்ய மலையில் தவமியற்றி வந்தார் அகஸ்திய முனிவர். விநாயகர் காக உருவெடுத்து அக்கமண்டலத்தைக் கவிழ்த்தார். காவிரி பெருகித் தமிழகம் முழுதும் ஓடி, சீர்காழிக்கருகிலுள்ள வனத்திலும் வளம் கூட்டியது.

2. பிரம்மன் விநாயகரை மறந்து சிருஷ்டி தொடங்குகையில் அவனுக்கு நல்லறிவு தருவதற்காக கணேசர் கோர உருவமெடுத்துப் படைப்புத் தொழிலுக்கு ஊறு செய்தார். அவரது உருவைக் கண்டு சந்திரன் பரிகாசமாக நகைத்தான். அவன் ஒளியை இழக்குமாறும், சந்திர தரிசனம் பாபத்தை உண்டாக்கும் என்றும் சபித்தார் விநாயகர். சந்திர ஒளியின்றி உலகம் தவிக்க, சந்திரனும் தவறு உணர்ந்தான். விநாயகப் பெருமான் சந்திரனுக்கு ஒளி தந்து, தமது திதியான சதுர்த்தி தவிர மற்ற தினங்களில் சந்திரனைக் காணலாம் என்றும், சதுர்த்தியில் காண்போருக்கு வீண் அபவாதம் உண்டாகும் என்றும் கூறினார்.

3. விநாயகர் மீது சிவன் இட்ட சாபம் சிவன் மீதே திரும்பியதாகத் 'திருவிளையாடற் புராணம்' கூறவில்லை. சிவபிரான் அம்பாளுக்கு சாஸ்திரங்கள் கற்பிக்கும்போது, தேவி ஒருபோது கல்வியில் கவனம் செலுத்தாதிருக்க, சிவனார் அம்பிகையை வலைச்சியாகுமாறு சபித்தார். விநாயகரும் முருகனும் இதை ஆட்சேபித்தனர். அவர்களை உள்ளே விட்ட நந்தியைச் சுறாமீனாகுமாறும், முருகனை ஊமையாகுமாறும் சபித்தார் சிவன். ஆயினும் விநாயகரைச் சபித்திட்டால் அது தன் மீதே திரும்பும் என்பதால் பிள்ளையாரை மட்டும் சபியாமல் இருந்தார். 'வெருவரு செவியின் வேழ முகத்தனை விதித்த சாபம் பெருவலி தன்னைச் சாரும் பெற்றியால் சாபம் கூறான்' என்கிறது திருவிளையாடற்புராணம்.

— ரா. க

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M.
Registered as a Newspaper in Ceylon

■ தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப் புகையிலைகளின் தன்மையான புகைநயம் தரும் பனாமா, பல லட்சம் பேர்களின் **முதல்** தேர்வாக விளங்குகிறது ■ அகில இந்திய ரகங்களுள், தன்னினத்திலேயே பெருவாரியான விற்பனையுடன் **முதன்மை** வகிக்கிறது பனாமா. ■ என்றும் புகழ் பரப்பிய வண்ணம் உள்ள பனாமா நாட்டின் பல பகுதிகளிலே **முதன் முதலில்** நிற்கிறது ■ இன்று மக்களைக் கவர்ந்துள்ள இருபதடங்கிய உறையில் இருபது ஆண்டுகளுக்கு முன் **முதலில்** வெளிப்பட்ட ரகமே பனாமாதான்.

